சினந்தனையற்றுப்பிரியமுந்தானற்றுச்செய்கையற்று
நினைந்ததுமற்றுநினையாமையுமற்றுநிர்ச்சிந்தனாய்த்
தனந்தனியேயிருந்தானந்தநித்திரைதங்குகின்ற
வனந்தனிலென்றிருப்பேனத்தனேகயிலாயத்தனே. (௩)

கையாரவேற்றுநின்றங்ஙனந்தின்றுகரித்துணியைத்
தையாதுடுத்துநின்சன்னிதிக்கேவந்துசந்ததமு
மெய்யாரநிற்பணிந்துள்ளேயுரோமம்விதிர்விதிர்ப்ப
வையாவென்றோலமிடுவதென்றோகயிலாயத்தனே. (௪)

நீரார்த்தமேனியுரோமஞ்சிலிர்த்துளநெக்குநெக்குச்
சேறாய்க்கசிந்துகசிந்தேயுருகிநின்சீரடிக்கே
மாறாத்தியானமுற்றானந்தமேற்கொண்டுமார்பிற்கண்ணீ
ராறாய்ப்பெருகக்கிடப்பதென்றோகயிலாயத்தனே. (௫)

செல்வரைப்பின்சென்றுசங்கடம்பேசித்தினந்தினமும்
பல்லினைக்காட்டிப்பரிதவியாமற்பரானந்தத்தி
னெல்லையிற்புக்கிடவேகாந்தமாயெனக்காமிடத்தே
யல்லலற்றென்றிருப்பேனத்தனேகயிலாயத்தனே. (௬)

மந்திக்குருளையொத்தேனில்லைநாயேன்வழக்கறிந்துஞ்
சிந்திக்குஞ்சிந்தையையானென்செய்வேனெனைத்தீதகற்றிப்
புந்திப்பரிவிற்குருளையையேந்தியபூசையைப்போ
லெந்தைக்குரியவன்காணத்தனேகயிலாயத்தனே. (௭)

வருந்தேன்பிறந்துமிறந்துமயக்கும்புலன்வழிபோய்ப்
பொருந்தேனரகிற்புகுகின்றிலேன்புகழ்வாரிடத்தி
லிருந்தேனினியவர்கூட்டம்விடேனியலஞ்செழுத்தா
மருந்தேனருந்துவனின்னருளாற்கயிலாயத்தனே. (௮)

மதுரை.

விடப்படுமோ விப்பிரவஞ்சவாழ்க்கையை விட்டுமனங்
இடப்படுமோ நின்னருளின்றியே தினமேயலையக்
கடப்படுமோ வற்பர்வாயிலிற்சென்று கண்ணீர்ததும்பிப்
படப்படுமோ சொக்கநாதசௌந்தரபாண்டியனே.

பொது.

உடைகோவணமுண்டுறங்கப்புறந்திண்ணையுண்டுணவிங்
கடைகாயிலையுண்டருந்தத்தண்ணீருண்டருந்துணைக்கே
விடையேறுமீசர்திருநாமமுண்டிந்தமேதினியில்
வடகோடுயர்ந்தென்னதென்கோடுசாய்ந்தென்னவான்பிறைக்கே

வீடுநமக்குத்திருவாலங்காடுவிமலர்தந்த
வோடுநமக்குண்டுவற்றாதபாத்திரமோங்குசெல்வ
நாடுநமக்குண்டுகேட்டதெல்லாந்தரநன்னெஞ்சமே
யீடுநமக்குச்சொலவோவொருவருமிங்கில்லையே.

நாடிக்கொண்டீசரைநாட்டமுற்றாயிலைநாதரடி
தேடிக்கொண்டாடித்தெளிந்தாயிலைசெகமாயைவந்து
மூடிக்கொண்டோமென்றுங்காமாயுதங்கண்முனிந்தவென்றும்
பீடிப்பையோநெஞ்சமேயுனைப்போலில்லைப்பித்தர்களே.

கையொன்றுசெய்விழியொன்றுநாடக்கருத்தொன்றெண்ணப்
பொய்யொன்றுவஞ்சகநாவொன்றுபேசப்புலால்கமழு
மெய்யொன்றுசாரச்செவியொன்றுகேட்கவிரும்புமியான்
செய்கின்றபூசையெவ்வாறுகொள்வாய்வினைதீர்த்தவனே.

கண்ணுண்டுகாணக்கருத்துண்டுநோக்கக்கசிந்துருகிப்
பண்ணுண்டுபாடச்செவியுண்டுகேட்கப்பல்பச்சிலையா
லெண்ணுண்டுசாத்தவெதிர்நிற்கவீசனிருக்கையிலே
மண்ணுண்டுபோகுதையோகெடுவீரிந்தமானுடமே.

சொல்லினுஞ்சொல்லின்முடிவினும்வேதச்சுருதியினு
மல்லினுமாசற்றவாகாயந்தன்னினுமாய்ந்துவிட்டோ
ரில்லினுமன்பரிடத்தினுமீசனிருக்குமிடங்
கல்லினுஞ்செம்பினுமோவிருப்பானெங்கள்கண்ணுதலே. (௬)

வினைப்போகமேயொருதேகங்கண்டாய்வினைதானொழிந்தாற்
றினைப்போதளவுநில்லாதுகண்டாய்சிவன்பாதநினை
நினைப்போரைமேவுநினையாரைநீங்கிந்நெறியினின்றா
லுனைப்போலொருவருண்டோமனமேயெனக்குற்றவரே. (௭)

பட்டைக்கிழித்துப்பருவூசிதன்னைப்பரிந்தெடுத்து
முட்டச்சுருட்டியென்மொய்குழலாள்கையின்முன்கொடுத்துக்
கட்டியிருந்தகனமாயக்காரிதன்காமமெல்லாம்
விட்டுப்பிரியவென்றோவிங்ஙனேசிவன்மீண்டதுவே. (௮)

சூதற்றகொங்கையும்மானார்கலவியுஞ்சூழ்பொருளும்
போதற்றபூசலுக்கென்செயலாஞ்செய்தபுண்ணியத்தால்
தீதற்றமன்னவன்சிந்தையினின்றுதெளிவதற்கோ
காதற்றவூசியைத்தந்துவிட்டானென்றன்கைதனிலே. (௯)

வாதுற்றதிண்புயரண்ணாமலையர்மலர்ப்பதத்தைப்
போதுற்றெப்போதும்புகலுநெஞ்சேயிந்தப்பூதலத்திற்
றீதுற்றசெல்வமென்றேடிப்புதைத்ததிரவியமென்
காதற்றவூசியும்வாராதுகாணுங்கடைவழிக்கே. (௰)

வேதத்தினுட்பொருண்மண்ணாசைமங்கையைவிட்டுவிடப்
போதித்தவன்மொழிகேட்டிலையோசெய்தபுண்ணியத்தா
லாதித்தன்சந்திரன்போலேவெளிச்சமதாம்பொழுது
காதற்றவூசியும்வாராதுகாணுங்கடைவழிக்கே. (௧௧)

மனையாளுமக்களும்வாழ்வுந்தனமுந்தன்வாயின்மட்டே
யினமானசுற்றமயானமட்டேவழிக்கேதுதுணை
தினையாமளவெள்ளளவாகினுமுன்புசெய்ததவந்
தனையாளவென்றும்பரலோகஞ்சித்திக்குஞ்சத்தியமே.

அத்தமும்வாழ்வுமகத்துமட்டேவிழியம்பொழுக
மெத்தியமாதரும்வீதிமட்டேவிம்மிவிம்மியிரு
கைத்தலமேல்வைத்தழுமைந்தருஞ்சுடுகாடுமட்டே
பற்றித்தொடருமிருவினைப்புண்ணியபாவமுமே.

சீயுங்குருதிச்செழுநீர்வழும்புஞ்செறிந்தெழுந்து
பாயும்புடைவையொன்றில்லாதபோதுபகலிரவா
யீயுமெறும்பும்புகுகின்றயோனிக்கிரவுபகன்
மாயுமனிதரைமாயாமல்வைக்கமருந்தில்லையே.

சீதப்பனிக்குண்டுசிக்கெனக்கந்தைதினம்பசித்தால்
நீதுய்க்கச்சோறுமனைதோறுமுண்டுநினைவெழுந்தால்
வீதிக்குணல்லவிலைமாதருண்டிந்தமேதினியி
லேதுக்குநீசலித்தாய்மனமேயென்றும்புண்பட்டே.

ஆறுண்டுதோப்புண்டணிவீதியம்பலந்தானுமுண்டு
நீறுண்டுகந்தைநெடுங்கோவணமுண்டுநித்தநித்த
மாறுண்டலாவிமயங்குநெஞ்சேமனைதோறுஞ்சென்று
சோறுண்டுதூங்கிப்பின்சும்மாவிருக்கச்சுகமுமுண்டே.

உடுக்கக்கவிக்கக்குளிர்காற்றுவெய்யிலொடுங்கிவந்தாற்
றடுக்கப்பழையவொருவேட்டியுண்டுசகமுழுதும்
படுக்கப்புறந்திண்ணையெங்கெங்குமுண்டுபசித்துவந்தாற்
கொடுக்கச்சிவனுண்டுநெஞ்சேநமக்குக்குறைவில்லையே.

மாடுண்டுகன்றுண்டுமக்களுண்டென்றுமகிழ்வதெல்லாம்
கேடுண்டெனும்படி கேட்டுவிட்டோமினிக்கேண்மனமே
யோடுண்டுகந்தையுண்டுள்ளேயெழுத்தைந்துமோதவுண்டு
தோடுண்டகண்டனடியார்நமக்குத்துணையுமுண்டே. (கஅ)

மாத்தானவத்தையுமாயாபுரியின்மயக்கத்தையு
நீத்தார்தமக்கொருநிஷ்டையுண்டோநித்தனன்புகொண்டு
வேர்த்தார்குளித்துப்பசித்தாற்புசித்துவிழித்துயின்று
பார்த்தாலுலகத்தவர்போலிருப்பர்பற்றற்றவரே. (கக)

ஒன்றென்றிருதெய்வமுண்டென்றிருவுயர்செல்வமெல்லா
மன்றென்றிருபசித்தோர்முகம்பார்நல்லறமுநட்பு
நன்றென்றிருநடுநீங்காமலேநமக்கிட்டபடி
யென்றென்றிருமனமேயுனக்கேயுபதேசமிதே. (உ०)

நாட்டமென்றேயிருசற்குருபாதத்தைநம்புபொம்ம
லாட்டமென்றேயிருபொல்லாவுடலையடர்ந்தசந்தைக்
கூட்டமென்றேயிருசுற்றத்தைவாழ்வைக்குடங்கவிழ்நீ
ரோட்டமென்றேயிருநெஞ்சேயுனக்குபதேசமிதே. (உக)

என்செயலாவதியாதொன்றுமில்லையினித்தெய்வமே
யுன்செயலேயென்றுணரப்பெற்றேனிந்தவூனெடுத்த
பின்செய்ததீவினையாதொன்றுமில்லைப்பிறப்பதற்கு
முன்செய்ததீவினையோவிங்ஙனேவந்துமூண்டதுவே. (உஉ)

திருவேடமாகித்தெருவிற்பயின்றெனைத்தேடிவந்து
பரிவாகப்பிச்சைசபகருமென்றுனைப்பதம்பணிந்தேன்
கருவாருமேதக்கடற்கரைமேவக்கருதுமென்னை
யுருவாக்கிக்கொள்ளவல்லோவிங்ஙனேசிவனுற்றதுவே. (உங)

விட்டேனுலகம்விரும்பேனிருவினைவீணருடன்
கிட்டேனவருரைகேட்டுமிரேன்மெய்கெடாதநிலை
தொட்டேன்சுகதுக்கமற்றுவிட்டேன்றொல்லைநான்மறைக்கு
மெட்டேனெனும்பரமென்னிடத்தேவந்திங்கெய்தியதே.

அட்டாங்கயோகமுமாதாரமாறுமவத்தைதயைந்தும்
விட்டேறிப்போனவெளிதனிலேவியப்பொன்றுகண்டேன்
வட்டாகிச்செம்மதிப்பாலூறலுண்டுமகிழ்ந்திருக்க
வெட்டாதபேரின்பமென்னைவிழுங்கியிருக்கின்றதே.

எரியெனக்கென்னும்புழுவோவெனக்கென்னுமிந்தமண்ணுஞ்
சரியெனக்கென்னும்பருந்தோவெனக்கெனுந்தான்புசிக்க
நரியெனக்கென்னும்புன்னாயெனக்கென்னுமிந்நாறுடலைப்
பிரியமுடன்வளர்த்தேனிதனாலென்னபேறெனக்கே.

அன்னைறன்வீதியாலிருப்பாகுமணிபடையோர்
நண்ணொருநாலொன்பதாமவரேவலுநண்ணுமிவ்வூர்
துண்ணெனப்பசிக்குமடைப்பள்ளியானசுகமுமெல்லா
மெண்ணிலிகாலமவமேவிடுத்தனமெண்ணரிதே.

என்பெற்றதாயருமென்னைப்பிணமென்றிகழ்ந்துவிட்டார்
பொன்பெற்றமாதரும்போவென்றுசொல்லிப்புலம்பிவிட்டார்
கொன்பெற்றமைந்தரும்பின்வலம்வந்துகுடமுடைத்தா
ருன்பற்றொழியவொருபற்றுமில்லையுடையவனே.

கறையற்றபல்லுங்கரித்துணியாடையுங்கள்ளமின்றிப்
பொறையுற்றநெஞ்சமும்பொல்லர்தவுனும்புறந்திண்ணையுந்
தறையிற்கிடப்புமிரந்துண்ணுமோடுஞ்சகமறியக்
குறைவற்றசெல்வமென்றேகோலமாமறைகூப்பிடுமே.

## பொது.

எட்டுத்திசையும்பதினாறுகோணமுமெங்குமொன்றாய்
முட்டித்ததும்பிமுளைத்தோங்குசோதியைமூடரெல்லாங்
கட்டிச்சுருட்டித்தங்கக்கத்தில்வைப்பர்கருத்தில்லையார்
பட்டப்பகலையிரவென்றுகூறிடும்பாதகரே. (௯0)

வாய்நாறுமூழன்மயிர்ச்சிக்குநாறிடுமையிடுங்கண்
பீநாறுமங்கம்பிணவெடிநாறும்பெருங்குழிவாய்ச்
சீநாறும்யோனியழுநீறுமிந்தியச்சேறுசிந்திப்
பாய்நாறுமங்கையர்க்கோவிங்ஙனேமனம்பற்றியதே. (௯௧)

உரைக்கைக்குநல்லதிருவெழுத்தைந்துண்டுரைப்படியே
செருக்கித்தரிக்கத்திருநீறுமுண்டுதெருக்குப்பையிற்
றரிக்கக்கரித்துணியாடையுமுண்டெந்தச்சாதியிலு
மிரக்கத்துணிந்துகொண்டேன்குறைவேதுமெனக்கில்லையே. (௯௨)

ஏதப்பட்டாயினிமேற்படும்பாட்டையிதென்றறிந்து
போதப்பட்டாயில்லைநல்லோரிடஞ்சென்றுபுல்லறிவால்
வாதைப்பட்டாய்மடமாதர்கல்விமயக்கத்திலே
பேதைப்பட்டாய்நெஞ்சமேயுனைப்போலில்லைபித்தருமே. (௯௩)

சுரப்பற்றுவல்வினைசுற்றமுமற்றுத்தொழில்களற்றுக்
கரப்பற்றுமங்கையர்கையிணக்கற்றுக்கவலையற்று
வரப்பற்றுநாதனைவாயாரவாழ்த்திமனமடங்கப்
பரப்பற்றிருப்பதன்றோபரமாபரமானந்தமே. (௯௪)

பேய்போற்றிரிந்துபிணம்போற்கிடந்திட்டபிச்சையெல்லா
நாய்போலருந்திநரிபோலுழன்றுநன்மங்கையரைத்
தாய்போற்கருதித்தமர்போலனைவர்க்குந்தாழ்மைசொல்லிச்
சேய்போலிருப்பர்கண்டீருண்மைஞானந்தெளிந்தவரே. (௯௫)

விடக்கேபருந்தின்விருந்தேகமண்டலவீணனிட்ட
முடக்கேபுழுவந்துறையிடமேநலமுற்றுமிலாச்
சடக்கேகருவிதளர்ந்துவிட்டாற்பெற்றதாயுந்தொடாத்
தொடக்கேயுனைச்சுமந்தேனின்னினேதுசுகமெனக்கே.

அழுதாற்பயனென்னநொந்தாற்பயனென்னவாவதில்லை
தொழுதாற்பயனென்னநின்னையொருவர்சுடவுரைத்து
பழுதாற்பயனென்னநன்மையுந்தீமையும்பங்கயத்தோ
னெழுதாப்படிவருமோசலியாதிரென்னேழைநெஞ்சே.

செல்வரைப்பின்சென்றுபசாரம்பேசித்தினந்தினமும்
பல்லினைக்காட்டிப்பரிதவியாமற்பரானந்தத்தி
னெல்லையிற்புக்குநல்லேகாந்தமாயெனக்காமிடத்தே
யல்லலற்றென்றிருப்பேனலநீழலரும்பொருளே.

ஊரீருமக்கோருபதேசங்கேளுமுடம்படங்கப்
போரீர்சமனைக்கழுவேற்றுநீற்றைப்புறந்திண்ணையிற்
சாரீரனந்தலைச்சுற்றத்தைநீங்கிச்சகநகைக்க
வேரீருமக்கவர்தாமேதருவரிணையடியே.

நீற்றைப்புனைந்தென்னநீராடப்போயென்னநீமனமே
மாற்றிப்பிறக்கவகையறிந்தாயில்லைமாமறைநூ
லேற்றிக்கிடக்குமெழுகோடிமந்திரமென்னகண்டா
யாற்றிற்கிடந்துந்துறையறியாமலலைகின்றையே.

ஓங்காரமாய்நின்றவத்துவிலேயொருவித்துவந்து
பாங்காய்முளைத்தபயனறிந்தாற்பதினாலுலகு
நீங்காமனீங்கிநிறையாநிறைந்துநிறையுருவா
யாங்காரமானவர்க்கெட்டாக்கனிவந்தமர்ந்திடுமே.

விதியார்படைப்புமரியாரளிப்பும்வியன்கயிலைப்
பதியார்தொடைப்புநம்பாலணுகாதுபரானந்தமே
கதியாகக்கொண்டுமற்றெல்லாந்துயிலிற்கனவெனநீ
மதியாதிருமனமேவிதுகாணன்மருந்துனக்கே. (சுஉ)

நாய்க்குண்டுதெண்டுநமக்குண்டுபிச்சைநமனைவெல்ல
வாய்க்குண்டுமந்திரபஞ்சாட்சரமதியாமல்வரும்
பேய்க்குண்டுநீறுதிகைப்புண்டுநின்றபிறவிப்பிணி
நோய்க்குண்டுதேசிகன்றன்னருளோக்கங்களோக்குதற்கே. (சுங)

நேமங்கணிட்டைகள்வேதங்களாகமநீதிநெறி
யோமங்கடர்ப்பணஞ்சந்திசெபமந்த்ரயோகநிலை
நாமங்கள்சந்தனம்வெண்ணீறுபூசிநலமுடனே
சாமங்கடோறுமிவர்செய்யும்பூசைகள்சர்ப்பனையே. (சுச)

நானெத்தனைபுத்திசொன்னாலுங்கேட்டிலைநன்னெஞ்சமே
யேனிப்படிக்கெட்டுழலுகின்றாயினியேதுமிலா
வானத்தின்மீனுக்குவன்றூண்டிவிட்டவகையதுபோற்
போனத்தைமீளநினைக்கின்றனையென்னபுத்தியிதே. (சுரு)

அஞ்சக்கரமெனுங்கோடாலிகொண்டிந்தவைம்புலனும்
வஞ்சப்புலக்கட்டைவேரறவெட்டிவளங்கள்செய்து
விஞ்சத்திருத்திச்சதாசிவமென்கின்றவித்தையிட்டுப்
புஞ்சக்களைபறித்தேன்வளர்த்தேன்சிவயோகத்தையே. (சுசா)

தாயாருஞ்சுற்றமும்பெண்டிருங்கைவிட்டுத்தாழ்ந்திடுநா
ணீயாருநானுரெனப்பகர்வாரந்தநேரத்திலே
நோயாரும்வந்துகுடிகொள்வரேகொண்டநோயுமொரு
பாயாருநீயுமல்லாற்பின்னையேதுநட்பாமுடலே. (சுஎ)

ஆயும்பொழுதுமயிர்க்கால்கடோறுமருங்கிருமி
தோயுமலக்குட்டையாகியகாயத்தைதச்சுட்டுவிட்டாற்
பேயுநடனமிடுங்கடமாமென்றுபேசுவதை
நீயுமறிந்திலையோபொருட்டேடநினைந்தனையே. (

பூணும்படிக்கல்லபொன்னுக்குத்தானல்லபூமிதனைக்
காணும்படிக்கல்லமங்கையர்க்கல்லநற்காட்சிக்கல்ல
சேணுங்கடந்தசிவனடிக்கல்லவென்சிந்தைகெட்டுச்
சாணும்வளர்க்கவடியேன்படுந்துயர்சற்றல்லவே. (௪

வெட்டாதசக்கரம்பேசாதமந்திரம்வேறொருவர்க்
கெட்டாதபுட்பமிறையாததீர்த்தமினிமுடிந்து
கட்டாதலிங்கங்கருதாதநெஞ்சங்கருத்தினுள்ளே
முட்டாதபூசையன்றோகுருநாதன்மொழிந்ததுவே. (௫

எருமுட்டைபிட்கினுதிர்ந்திடுஞ்செல்லுக்கெவரழுவார்
கருமுட்டைபுக்குக்கழலகன்றாய்கனதுக்கமதாய்ப்
பெருமுட்டுப்பட்டவர்போலழும்பேதையிர்பேத்துகிறீ
ரொருமுட்டும்வீட்டுமொரணமமென்றைக்குமோதுமினே. (௫

மையாடுகண்ணியுமைந்தரும்வாழ்வுமனையுஞ்செந்தி
யையாநின்மாயையுருவெளித்தோற்றமகிலத்துள்ளே
மெய்யாயிருந்ததுநாட்செலநாட்செலவெட்டவெறும்
பொய்யாய்ப்பழங்கதையாய்க்கனவாய்மெல்லப்போனதுவே. (௫௨

ஆயாய்பலகலையாய்ந்திடுந்தூயவருந்தவர்பாற்
போயாகிலுமுண்மையைத்தெரிந்தாயில்லைபூதலத்தில்
வேயார்ந்ததோளியர்காமவிகாரத்தில்வீழ்ந்தழுந்திப்
பேயாய்விழிக்கின்றனைமனமேயென்னபித்துனக்கே. (௫௩)

அடியாருறவுமரன்பூசைநேசமுமன்புமன்றிப்
படிமீதில்வேறுபயனுளதோபங்கயன்வகுத்த
குடியானசுற்றமுந்தாரமும்வாழ்வுங்குயக்கலங்கள்
தடியாலடியுண்டவாறொக்குமென்றினஞ்சார்ந்திலரே. (௫௪)

ஆங்காரப்பொக்கசங்கோபக்களஞ்சியமாணவந்தா
னீங்காவரண்மனைபொய்வைத்தகூடம்விண்ணீடிவளர்
தேங்காற்பெருமதிற்காமவிலாசமித்தேகங்கந்தல்
பாங்காயுனைப்பணிந்தெப்படிஞானம்பலிப்பதுவே. (௫௫)

ஒழியாப்பிறவியெடுத்தேங்கியேங்கியுழன்றநெஞ்சே
யழியாப்பதவிக்கவுடதங்கேட்டியறுதியனை
மழுமான்கரத்தனைமால்விடையானைமனத்திலுன்னி
விழியாற்புனல்சிந்திவிம்மியழுநன்மைவேண்டுமென்றே. (௫௬)

நாய்க்கொருசூலுமதற்கோர்மருத்துவநாட்டிலுண்டோ
பேய்க்கொருஞானம்பிடிபடுமோபெருங்காஞ்சிரங்கா
யாக்குவராரதருந்துவராரதுபோலுடம்பு
நீக்கிரையாவதல்லாலேதுக்காமிதைச்செப்புமினே. (௫௭)

கச்சிற்கிடக்குங்கனதனத்திற்கடைக்கண்கள்பட்டே
யிச்சித்திருக்கின்றவேழைநெஞ்சேயிமவான்பயந்த
பச்சைப்பசுங்கொடியுண்ணாமுலைபங்கர்பாதத்திலே
தைச்சுக்கிடமனமேயொருகாலுந்தவறில்லையே. (௫௮)

மாணார்விழியைக்கடந்தேறிவந்தனன்வாழ்குருவுங்
கோனாகியென்னைக்குடியேற்றிக்கொண்டனன்குற்றமில்லை
போனாலும்பேறிருந்தாலுநற்பேறிதுபொய்யன்றுகா
ணானாலுமிந்தவுடம்போடிருப்பதருவருப்பே. (௫௯)

## தாயாருக்குத்தகனக்கிரியைசெய்கையிற்பாடியவெண்பா.

சற்றாகினுந்தன்னைத்தானறியாய்தனையாய்ந்தவரை
யுற்றாகிலுமுரைக்கப்பொருந்தாயுனக்கானநிலை
பற்றாய்குருவைப்பணியாய்பரத்தையர்பாலிற்சென்றென்
பெற்றாய்மடநெஞ்சமேயுனைப்போலில்லைபித்தனுமே. (௬(
உளியிட்டகல்லையுமொப்பிட்டசாந்தையுமூத்தையறப்
புளியிட்டசெம்பையும்போற்றுகிலேனுயர்பொன்னெனவே
யொளியிட்டதாளிரண்டுள்ளேயிருத்துவதுண்மையென்று
வெளியிட்டடைத்துவைத்தேனினிமேலொன்றும்வேண்டிலனே. (

திருச்சிற்றம்பலம்.

---

## தாயாருக்குத்தகனகிரியை செய்கையிற்பாடிய வெண்பா.

ஐயிரண்டுதிங்களாவங்கமெல்லாநொந்துபெற்றுப்
பையலென்றபோதேபரிந்தெடுத்துச் - செய்யவிரு
கைப்புறத்திலேந்திக்கனகமுலைதந்தாளை
யெப்பிறப்பிற்காண்பேனினி. (௧
முந்தித்தவங்கிடந்துமுந்நூறுநாட்சுமந்தே
யந்திபகலாச்சிவனையாதரித்துத் - தொந்தி
சரியச்சுமந்துபெற்றதாயார்தமக்கோ
வெரியத்தழன்மூட்டுவேன். (௨
வட்டிலிலுந்தொட்டிலிலுமார்மேலுந்தோண்மேலுங்
கட்டிலிலும்வைத்தென்னைக்காதலித்து - முட்டச்
சிறகிலிட்டுக்காப்பாற்றிச்சீராட்டுந்தாய்க்கோ
விறகிலிட்டுத்தீமூட்டுவேன். (௩

நொந்துசுமந்துபெற்றுநோவாமலேந்திமுலை
தந்துவளர்த்தெடுத்துத்தாழாமே - யந்திபகல்
கையிலேகொண்டென்னைக்காப்பாற்றுந்தாய்தனக்கோ
மெய்யிலே தீமூட்டுவேன். (ரு)

அரிசியோநானிடுவேனாத்தாடனக்கு
வரிசையிட்டுப்பார்த்துமகிழாம - லுருசியுள்ள
தேனேயமிர்தமேசெல்வத்திரவியபு
மானேயெனவழைத்தவாய்க்கு. (௬)

அள்ளியிடுவதரிசியோதாய்தலைமேற்
கொள்ளிதனைவைப்பேனோகூசாமல் - மெள்ள
முகமேன்முகம்வைத்துமுத்தாடியென்றன்
மகனேயெனவழைத்தவாய்க்கு. (௭)

விருத்தம்.

முன்னையிட்டதீமுப்புரத்திலே
பின்னையிட்டதீதென்னிலங்கையி
லன்னையிட்டதீயடிவயிற்றிலே
யானுமிட்டதீமூள்கமூள்கவே. (எ)

வெண்பா.

வேகுதேதீயதனில்வெந்துபொடிசாம்ப
லாகுதேபாவியேனையகோ - மாகக்
குருவிபறவாமற்கோதாட்டியென்னைக்
கருதிவளர்த்தெடுத்தகை. (அ)

வெந்தாளோசோணகிரிவித்தகாநின்பதத்தில்
வந்தாளோவென்னைமறந்தாளோ - சந்ததமு
முன்னையேநோக்கியுகந்துவரங்கிடந்தென்
றன்னையயீன்றெடுத்ததாய். (௯)

வீற்றிருந்தாளன்னைவீதிதனிலிருந்தாள்
நேற்றிருந்தாளின்றுவெந்துநீறானாள் - பாற்றெளிக்க
வெல்லீரும்வாருங்களேதென்றிரங்காமல்
எல்லாஞ் சிவமயமே யாம். (க

## தனிவெண்பா.

### இடைமருது.

மென்றுவிழுங்கிவிடாய்கழிக்கநீர்தேட
லென்றுவிடியுமெனக்கென்கோவே - நன்றி
கருதார்புரமூன்றுங்கட்டழலாற்செற்ற
மருதாவுன்சந்நிதிக்கேவந்து. (க

### ஒற்றி.

கண்டங்கரியதாங்கண்மூன்றுடையதா
மண்டத்தைப்போலவழகியதாந் - தொண்ட
ருடலுருகத்தித்திக்குமோங்குபுகழொற்றிக்
கடலருகேநிற்குங்கரும்பு. (உ

ஓடுவிழுந்துசீப்பாயுமொன்பதுவாய்ப்புண்ணுக்
கிடுமருந்தையானறிந்துகொண்டேன் - கடுவருந்துந்
தேவாதிதேவன்றிருவொற்றியூர்த்தெருவிற்
போவாரடியிற்பொடி. (ங

வாவியெல்லாந்தீர்த்தமணலெல்லாம்வெண்ணீறு
காவனங்களெல்லாங்கணநாதர் - பூவுலகி
லீதுசிவலோகமென்றென்றேமெய்த்தவத்தோ
ரோதுந்திருவொற்றியூர். (ச

## திருவாரூர்.

ஆரூரரிங்கிருக்கவவ்வூர்த்திருநாளென்
றூரூர்கடோறுமுழலுவீர் - நேரே
யுளக்குறிப்பைநாடாதவூமர்காணீவிர்
விளக்கிருக்கத்தீத்தேடுவீர். (௫)

எருவாய்க்கிருவிரன்மேலேறுண்டிருக்குங்
கருவாய்க்கோகண்கலக்கப்பட்டாய் - திருவாரூர்த்
தேரோடும்வீதியிலேசெத்துக்கிடக்கின்றாய்
நீரோடுந்தாரைக்காநீ. (௬)

## திருக்காஞ்சி.

எத்தனையூரெத்தனைவீடெத்தனைதாய்பெற்றவர்க
ளெத்தனைபேரிட்டழைக்கவேனென்றே - னித்த
மெனக்குக்களையாற்றாயேகம்பாகம்பா
வுனக்குத்திருவிளையாட்டோ. (௭)

## கச்சிக்காரோணம்.

அத்திமுதலெறும்பீறானவுயிரத்தனைக்குஞ்
சித்தமகிழ்ந்தளிக்குந்தேசிகா - மெத்தப்
பசிக்குதையாபாவியேன்பாழ்வயிற்றைப்பற்றி
யிசிக்குதையாகாரோணரே. (௮)

## திருக்காளத்தி.

பொய்யையொழியாய்புலாலைவிடாய்காளத்தி
யையரையெண்ணாயறஞ்செய்யாய் - வெய்ய
சினமேயொழியாய்திருவெழுத்தைந்தோதாய்
மனமேயுனக்கென்னமாண்பு. (௯)

## திருவிருப்பையூர்.

மாதாவுடல்சலித்தாள்வல்வினையேன்கால்சலித்தேன்
வேதாவுங்கைசலித்துவிட்டானே - நாதா
விருப்பையூர்வாழ்சிவனேயின்னமோரன்னை
கருப்பையூர்வாராமற்கா.

## திருவையாறு.

மண்ணுந்தணலாறவானும்புகையாற
வெண்ணரியதாயுமிளைப்பாறப் - பண்ணுமயன்
கையாறவுமடியேன்காலாறவுங்கண்பா
ரையாதிருவையாறு.

## குற்றாலம்.

காலன்வருமுன்னேகண்பஞ்சடைமுன்னே
பாலுண்கடைவாய்படுமுன்னே - மேல்விழுந்தே
யுற்றாரழுமுன்னேயூரார்சுடுமுன்னே
குற்றாலத்தானையே கூறு.

---

## பொதுவெண்பா.

சிற்றம்பலமுஞ்சிவனுமருகிருக்க
வெற்றம்பலந்தேடிவிட்டோமே - நித்தம்
பிறந்திடத்தைத்தேடுதேபேதைமடநெஞ்சங்
கறந்திடத்தைநாடுதேகண்.

தோடவிழும்பூங்கோதைத்தோகையுனையிப்போது
தேடினவர்போய்விட்டார்தேறியிரு - நாடிநீ
யென்னைநினைத்தாலிடுப்பிலுதைப்பேறை
னுன்னைநினைத்தாலுதை.

வாசற்படி கடந்துவாராதபிச்சைக்கிங்
காசைப்படுவதில்லையண்ணலே - யாசைதனைப்
பட்டிறந்தகாலமெலாம்போதும்பரமேட்டி
சுட்டிறந்தஞானத்தைச்சொல்.

(௩)

நச்சரவம்பூண்டானைநன்றாத்தொழுவதுவு
மிச்சையிலேதானங்கிருப்பதுவும் - பிச்சைதனை
வாங்குவதுமுண்பதுவும்வந்துதிருவாயிலிலே
தூங்குவதுந்தானேசுகம்.

(௪)

இருக்குமிடந்தேடியென்பசிக்கேயன்ன
முருக்கமுடன்கொண்டுவந்தாலுண்பேன் - பெருக்க
வழைத்தாலும்போகேனரனேயென்றேக
மிளைத்தாலும்போகேனினி.

(௫)

விட்டுவிடப்போகுதுயிர்விட்டவுடனேயுடலைச்
சுட்டுவிடப்போகின்றார்சுற்றத்தார் - பட்டதுபட்
டெந்நேரமுஞ்சிவனையேத்துங்கள்போற்றுங்கள்
சொன்னேனதுவேசுகம்.

(௬)

ஆவியொடுகாயமழிந்தாலுமேதினியிற்
பாவியென்றுநாமம்படையாதே - மேவியசீர்
வித்தாரமுங்கடம்பும்வேண்டாமடநெஞ்சே
செத்தாரைப்போலேதிரி.

(௭)

வெட்டவெளியானவெளிக்குந்தெரியாது
கட்டளையுங்கைப்பணமுங்காணாதே - இட்டமுடன்
பற்றென்றார்பற்றாதுபாவியேனெஞ்சிலவன்
இற்றெனவேவைத்தவினிப்பு.

(௮)

## பின்முடுகு வெண்பா.

இப்பிறப்பைநம்பியிருப்பரோநெஞ்சகமே
வைப்பிருக்கவாயின்மனையிருக்கச் - சொப்பனம்போல்
விக்கிப்பற்கிட்டக்கண்மெத்தப்பஞ்சிட்டப்பைக்
கச்சிச்செத்துக்கொட்டக்கண்டு.

மேலுமிருக்கவிரும்பினையேவெள்விடையோன்
சீலமறிந்திலையேசிந்தையே - கால்கைக்குக்
கொட்டையிட்டுமெத்தையிட்டுக்குத்திமொத்தப்பட்டவுடல்
கட்டையிட்டுச்சுட்டுவிடக்கண்டு.

ஒன்பதுவாய்த்தோற்பைக்கொருநாளைப்போலவே
யன்புவைத்துநெஞ்சேயலைந்தாயே - வன்கழுக்க
டத்தித்தத்திச்சட்டைதட்டிக்கட்டிப்புட்டுக்
கத்திக்குத்தித்தின்னக்கண்டு.

இன்னம்பிறக்கவிசைவையோநெஞ்சமே
மன்னரிவரென்றிருந்துவாழ்ந்தவரை - முன்ன
மெரிந்தகட்டைமீதிலிணக்கோவணத்தை
யுரிந்துருட்டிப்போட்டதுகண்டு.

முதற்சங்கமுதூட்டுமொய்குழலார்தம்மை
நடுச்சங்கநல்விலங்குபூட்டுங் - கடைச்சங்க
மாம்போதனவூதுமம்மட்டோவிம்மட்டோ
நாம்பூமிவாழ்ந்தநலம்.

எத்தனைநாள்கூடியெடுத்தசரீரமிவை
யத்தனையுமண்டின்பதல்லவோ - வித்தகனார்
காலைப்பிடித்துமெள்ளக்கங்குல்பகலற்றிடத்தே
மேலைக்குடியிருப்போமே.

எச்சிலென்றுசொல்லியிதமகிதம்பெசாதே
யெச்சிலிருக்குமிடமறியீ - ரெச்சிறனை
யுய்த்திருந்துபார்த்தாலொருமைவெளிப்படும்பின்
சித்தநிராமயமாமே.

(கரு)

எத்தனைபேர்நட்டகுழியெத்தனைபேர்தொட்டமுலை
யெத்தனைபேர்பற்றியிழுத்தவிதழ் - நித்தநித்தம்
பொய்யடாபேசும்புவியின்மடமாதரைவிட்
டுய்யடாவுய்யடாவுய்.

(கசா)

இருப்பதுபொய்போவதுமெய்யென்றெண்ணிநெஞ்சே
யொருத்தருக்குந்தீங்கினைநீயுன்னாதே - பருத்தொந்தி
நம்மதென்றுநாமிருப்பநாய்நரிகள்பேய்கழுகு
தம்மதென்றுதாமிருக்குந்தான்.

(கஎ)

எத்தொழிலைச்செய்தாலுமேதவத்தைபட்டாலு
முத்தர்மனமிருக்குமோனத்தே - வித்தகமாய்க்
காதிவிளையாடியிருகைவீசிவந்தாலுந்
தாதிமனநீர்க்குடத்தேதான்.

(கஅ)

மாலைப்பொழுதினறுமஞ்சளரைத்தேகுளித்து
வேலைமினக்கிட்டுவிழித்திருந்து - சூலாகிப்
பெற்றாள்வளர்த்தாள்பெயரிட்டாள்பெற்றபிள்ளை
பித்தானாலென்செய்வாள்பின்.

(கக)

விருத்தம்.

நாப்பிளக்கப் பொய்யுரைத்து நவநிதியந்தேடி
நலனொன்றுமறியாதநாரியரைக்கூடிப்
பூப்பிளக்கப்பொய்யுரைத்துப் புற்றீசல்போலப்
புலபுலெனக்கலகலெனப் புதல்வர்களைப்பெறுவீர்

காப்பதற்கும்வகையறியீர்கைவிடவுமாட்டீர்
கவர்பிளந்தமரத்துளையிற்காலுழைத்துக்கொண்டீர்
ஆப்பதனையசைத்துவிட்டகுரங்கதனைப்போல
அகப்பட்டீர்கிடந்துழலவகப்பட்டீரே.

இதுவுமது-வேறு.

வடிவந்தாலும்வாலிபம்மகளுந்தாயுமாமியும்
படிகொண்டாருமூரிலேபழிகொண்டாடனீதியோ
குடிவந்தாலுமேழையேகுயவன்றாலுங்கூழையோ
நடுநின்றாலும்வீணரோநகரன்குறையானதே.

இதுவுமது வேறு.

மண்ணுமுருகுமரமுருகுமாயையுருகுமாலுருகும்
பெண்ணுமுருகுமாணுருகும்பேதாபேதவகையுருகும்
அண்ணலுருகுமிடத்தமர்ந்தவாத்தாளுருகுமரவணையான்
எண்ணியுருகுங்குருநாதனென்பாலுரைத்தவோர்மொழியே.

திருச்சிற்றம்பலம்.

---

# முதல்வன் முறையீடு.

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

மூலமறியேன்முடியுமுடிவறியேன்
ஞாலத்துட்பட்டதுயர்நாடநடுக்குதடா.

அறியாமையாமலத்தாலறிவுமுதற்கெட்டனடா
பிரியாவினைப்பயனாற்பித்துப்பிடித்தனடா.

தனுவாதியநான்குந்தாறும்மயங்கினண்டா
மனுவாதிசத்திவலையிலகப்பட்டனடா. (௩)

மாமாயையென்னும்வனத்திலலைகிறண்டா
தாமாயுலகனைத்துந்தாதுகலங்கிறண்டா. (௪)

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

மண்ணாசைப்பட்டேனைமண்ணுண்டுபோட்டதடா
பொன்னாசைபெண்ணாசைபோகேனேயென்குதே. (௫)

மக்கள்சுற்றத்தாசைமறக்கேனேயென்குதே
திக்கரசாமாசையது நீரேனேயென்குதே. (௬)

வித்தைகற்குமாசையதுவிட்டொழியேனென்குதே
சித்துகற்குமாசைசிதையேனேயென்குதே. (௭)

மந்திரத்திலாசைமறக்கேனேயென்குதே
சுந்தரத்திலாசைதுறக்கேனேயென்குதே. (௮)

கட்டுவர்க்கத்தாசைகழலேனேயென்குதே
செட்டுதனிலாசைசிதையேனேயென்குதே. (௯)

மாற்றுஞ்சலவைமறக்கேனேயென்குதே
சோற்றுக்குழியுமின்னந்தூரேனேயென்குதே. (௧௦)

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

ஐந்துபுலனுமடங்கேனேயென்குதே
சிந்தைதவிக்கிறதுந்தேறேனேயென்குதே. (௧௧)

காமக்குரோதங்கடக்கேனேயென்குதே
நாமேயரசென்றுநாடோறுமெண்ணுதே. (௧௨)

அச்சமாங்காரமடங்கேனேயென்குதே
கைச்சுமின்னுமானங்கழலேனேயென்குதே. (௧௩)

நீர்க்குமிழியாமுடலைநித்தியமாயெண்ணுதே
ஆர்க்குமுயராசையழியேனேயென்குதே.

கண்ணுக்குக்கண்ணெதிரேகட்டையில்வேகக்கண்டும்
எண்ணுந்திரமாயிருப்போமென்றெண்ணுதே.

அநித்தியத்தைநித்தியமென்ருதரவாயெண்ணுதே
தனித்திருக்கேனென்குதேதனேமறக்கேனென்குதே.

நரகக்குழியுமின்னுநான்புசிப்பேனென்குதே
உரகப்படத்தல்குலுனேக்கெடுப்பேனென்குதே.

குரும்பைமுலையுங்குடிகெடுப்பேனென்குதே
அரும்புவிழியுமென்றனுவியுண்பேனென்குதே.

மாதருருக்கொண்டமறலிவஞ்சமெண்ணுதே
ஆதரவுமற்றிங்கரக்காயுருகிறண்டா.

கந்தனையீன்றருளுங்கன்னிவனநாதா
எந்தவிதத்திறுனேறிப்படருவண்டா.

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

புல்லாகிப்பூடாய்ப்புலர்ந்தநாள்போதாதோ
கல்லாய்மரமாய்க்கழிந்தநாள்போதாதோ.

கிரியாய்க்கீடமாய்க்கெட்டநாள்போதாதோ
நீரியாயூர்வனவாய்நின்றநாள்போதாதோ.

பூதமொடுதேவருமாய்ப்போனநாள்போதாதோ
வேதனைசெய்தானவராய்வீந்தநாள்போதாதோ.

அன்னைவயிற்றிலழிந்தநாள்போதாதோ
மன்னவனுய்வாழ்ந்துமரித்தநாள்போதாதோ.

தாயாகித்தாரமாய்த்தாழ்ந்தநாள்போதாதோ
சேயாப்புருடனுமாய்ச்சென்றநாள்போதாதோ. (உரு)

நோயுண்ணவேமெலிந்துநொந்தநாள்போதாதோ
பேயுண்ணப்பேயாய்ப்பிறந்தநாள்போதாதோ. (உசு)

ஊனவுடல்கூன்குருடாயுற்றநாள்போதாதோ
ஈனப்புசிப்பிலிளைத்தநாள்போதாதோ. (உஎ)

பட்டகளையும்பரதவிப்பும்போதாதோ
கெட்டநாள்கெட்டெனென்றுகேளாதும்போதாதோ. (உஅ)

நில்லாமைக்கேயழுதுநின்றநாள்போதாதோ
எல்லாருமென்பாரமெடுத்தநாள்போதாதோ. (உகூ)

காமன்கணையாற்கடைபட்டல்போதாதோ
எமன்கரத்தாலிடியுண்டல்போதாதோ. (௩0)

நான்முகன்பட்டோலைநறுக்குண்டல்போதாதோ
தேன்றுளபத்தானேமிதேக்குண்டல்போதாதோ. (௩க)

உருத்திரனார்சங்காரத்துற்றநாள்போதாதோ
வருத்தமறிந்தையிலைவாவென்றழைத்தையிலை. (௩உ)

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

பிறப்பைத்தவிர்த்தையிலைபின்னுகைக்கொண்டையிலை
இறப்பைத்தவிர்த்தையிலையென்னென்றுகேட்டையிலை. (௩௩)

பாசமெரித்தையிலைபரதவிப்பைத்தீர்த்தையிலை
பூசியநீற்றைநப்புனையென்றளித்தையிலை. (௩௪)

அடிமையென்றுசொன்னையிலையக்குமணிதந்தையிலை
விடுமுலகம்போக்கியுன்றன்வேடமளித்தையிலை. (௩௫)

உன்னிலழைத்தையிலையொன்றாக்கிக்கொண்டையிலை
நின்னடியார்கூட்டத்தினியழைத்துவைத்தையிலை.

ஓங்குபரத்துளொளித்தவடியார்க்கடியான்
ஈங்கோரடியானெமக்கென்றுரைத்தையிலை.

நாமந்தரித்தையிலைநானொழியநின்றையிலை
சேமவருளிலெனைச்சிந்தித்தழைத்தையிலை.

முத்தியளித்தையிலைமோனங்கொடுத்தையிலை
சித்தியளித்தையிலைசீராட்டிக்கொண்டையிலை.

தவிர்ப்பைத்தவிர்த்தையிலைதானாக்கிக்கொண்டையிலை
அவிப்பரியதீயாமென்னாசைதவிர்த்தையிலை.

நின்றநிலையினிறுத்தியெனைவைத்தையிலை
துன்றுங்கரணமொடுதொக்கழியப்பார்த்தையிலை.

கட்டவுலகக்காட்சிக்கட்டொழியப்பார்த்தையிலை
நிட்டையிலேநில்லென்றுநீநிறுத்திக்கொண்டையிலை.

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

கடைக்கணருள்தாடாகன்னிவனநாதா
கெடுக்குமலமொருக்கிக்கிட்டிவரப்பாரேடா.

காதல்தணியேனோகண்டுமகிழேனோ
சாதல்தவிரேனோசங்கடந்தான்தீரேனோ.

உன்னைத்துதியேனோவூர்நாடிவாரேனோ
பொன்னடியைப்பாரேனோபூரித்துநில்லேனோ.

ஓங்காரப்பொற்சிலம்பினுல்லாசம்பாரேனோ
பாங்கானதண்டைபலபணியும்பாரேனோ.

வீரகண்டாமணியின்வெற்றிதனைப்பாரேனே
சூரர்கண்டுபோற்றுமந்தச்சுந்தரத்தைப்பாரேனே (௪௭)

இடையில்புலித்தோலிருந்தநலம்பாரேனே
விடையிலெழுந்தருளும்வெற்றிதனைப்பாரேனே. (௪௮)

ஆனையுரிபோர்த்தவழகுதனைப்பாரேனே
மானைப்பிடித்தேந்துமலர்க்கரத்தைப்பாரேனே. (௪௯)

மாண்டார்தலைபூண்டமார்பழகைப்பாரேனே
ஆண்டார்நமக்கென்றறைறந்து திரியேனே. (௫0)

கண்டங்கறுத்துநின்றகாரணத்தைப்பாரேனே
தொண்டர்குழுவினின்றதோற்றமதைப்பாரேனே. (௫௧)

அருள்பழுத்தமாமதியாமாநநத்தைப்பாரேனே
திருநயனக்கடையொளிருஞ்செழுங்கொழுமைபாரேனே. (௫௨)

செங்குமிழின்றுண்டம்வளர்சிங்காரம்பாரேனே
அங்கனிவையவென்றவதரத்தைப்பாரேனே. (௫௩)

முல்லைநிலவெறிக்குமூரலொளியாரேனே
அல்லார்புருவத்தழகுதனைப்பாரேனே. (௫௪)

மகரங்கிடந்தொளிரும்வண்மைதனைப்பாரேனே
சிகரமுடியழகுஞ்செஞ்சடையும்பாரேனே. (௫௫)

கங்கையொடுதிங்கணின்றகாட்சிதனைப்பாரேனே
பொங்கரவைத்தான்சடையிற்பூண்டவிதம்பாரேனே. (௫௬)

சரக்கொன்றைபூத்தசடைக்காட்டைப்பாரேனே
எருக்கறுகூமத்தையணியேகாந்தம்பாரேனே. (௫௭)

கொக்கிறகுசூடிநின்றகொண்டாட்டம்பாரேனே
அக்கினியையேந்திநின்றவாநந்தம்பாரேனே. (ரு

தூக்கியகாலுந்துடியிடையும்பாரேனே
தாக்குமுயலகன்மேற்றூண்டவத்தைப்பாரேனே. (ரு

வீசுகரமும்விகசிதமும்பாரேனே
ஆசையளிக்குமபயகரம்பாரேனே. (சு

அரிபிரமர்போற்றவமரர்சயசயெனப்
பெரியம்மைபாகம்வளர்பேரழகைப்பாரேனே. (சு

சுந்தரநீற்றின்சொகுசுதனைப்பாரேனே
சந்திரசேகரனுய்த்தயவுசெய்தல்பாரேனே. (சு௨

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

கெட்டநாள்கெட்டாலுங்கிருபையினிப்பாரேடா
பட்டநாள்பட்டாலும்பதமெனக்குக்கிட்டாதோ. (சுந

நற்பருவமாக்குமந்தநாளெனக்குக்கிட்டாதோ
எப்பருவமுங்கழன்றவேகாந்தங்கிட்டாதோ. (சுச

வாக்கிறந்துநின்றமவுனமதுகிட்டாதோ
தாக்கிறந்துநிற்குமந்தத்தற்சுத்திகிட்டாதோ. (சுரு

வெந்துயரைத்தீர்க்குமந்தவெட்டவெளிகிட்டாதோ
சிந்தையையந்தீர்க்குமந்தத்தேறலதுகிட்டாதோ. (சுசு

ஆனவடியார்க்கடிமைகொள்க்கிட்டாதோ
ஊனமறவென்னையுணர்த்துவித்தல்கிட்டாதோ. (சுஎ

என்னென்றுசொல்லுவண்டாவென்குருவேகேளேடா
பின்னையெனக்குநீயல்லாற்பிறிதிலையே. (சுஅ

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

அன்னவிகாரமதுவற்றவிடங்கிட்டாதோ
சொன்னவிகாரந்தொலைந்தவிடங்கிட்டாதோ (௬௯)

உலகவிகாரமொழிந்தவிடங்கிட்டாதோ
மலக்குழுவின்மின்னார்வசியாதுங்கிட்டாதோ. (௭௦)

ஒப்புவமைபற்றொழிந்தவிடங்கிட்டாதோ
செப்புதற்குமெட்டாத்தெளிந்தவிடங்கிட்டாதோ. (௭௧)

வாக்குமனாதீதகோசரத்திற்செல்லவெனைத்
தாக்குமருட்குருவேநின்றாளிணைக்கேயான்போற்றி. (௭௨)

பட்டணத்தார் முதல்வன் முறையீடு
முற்றிற்று.

---

## அருட்புலம்பல்.

ஐங்கரனைத்தெண்டனிட்டேனருளடையவேண்டுமென்று
தங்காமல்வந்தொருவன்றற்சொருபங்காட்டியெனை. (௧)

கொள்ளைப்பிறப்பறுக்கக்கொண்டான்குருவடிவம்
கள்ளப்புலனறுக்கக்காரணமாய்வந்தாண்டி. (௨)

ஆதாரமோராறுமைம்பத்தோரக்ஷரமும்
சூதானகோட்டையெல்லாஞ்சுட்டான்றுரிசறவே. (௩)

மெத்தவிகாரம்விளைக்கும்பலபலவாம்
தத்துவங்களெல்லாந்தலைகெட்டுவெந்ததடி. (௪)

என்னோடுடன்பிறந்தாரெல்லாரும்பட்டார்கள்
தன்னந்தனியேதரித்திருக்கமாட்டேண்டி. (௫)

எல்லாரும்பட்டகளமென்றுதொலையுமடி
சொல்லியழுதாற்றுயரமெனக்காறுமடி.

மண்முதலாமைம்பூதமாண்டுவிழக்கண்டேண்டி
விண்முதலாமைம்பொறிகள்வெந்துவிழக்கண்டேண்டி.

நீக்காப்புலன்களைந்துநீறாகவெந்ததடி
வாக்காதியைவரையுமாண்டுவிழக்கண்டேண்டி.

மனக்கரணமத்தனையும்வகைவகையேமட்டழிய
இனக்கரணத்தோடேயெரிந்துவிழக்கண்டேண்டி.

ஆத்துமதத்துவங்கள்அடுக்கழியவெந்ததடி
போற்றும்வகையெப்படியோபோதமிழந்தானை.

வித்தியாதத்துவங்கள்வெந்துவிழக்கண்டேண்டி
சுத்தவித்தையைந்தினையுஞ்சுட்டான்றரிசறவே.

மூன்றுவகைக்கிளையுமுப்பத்தறுவரையும்
கான்றுவிழச்சுட்டுக்கருவேரறுத்தாண்டி.

குருவாகிவந்தானோகுலமறுக்கவந்தானோ
உருவாகிவந்தானோவுருவழிக்கவந்தானோ.

கேடுவருமென்றறியேன்கெடுமதிகண்டோற்றாமல்
பாடுவருமென்றறியேன்பதியாண்டிருந்தேண்டி.

எல்லாரும்பட்டகளமின்னவிடமென்றறியேன்
பொல்லாங்குதீர்க்கும்பொறியிலியைக்கண்டேண்டி.

உட்கோட்டைக்குள்ளிருந்தாரொக்கமடிந்தார்கள்
அக்கோட்டைக்குள்ளிருந்தாரறுபதுபேர்பட்டார்கள்.

ஒக்கமடிந்ததடி பூடுருவவெந்ததடி
கற்கோட்டையெல்லாங்கரிக்கோட்டையாச்சுதடி. (௧௭)

தொண்ணூற்றறுவரையுஞ்சுட்டான்றுரிசறவே
கண்ணேறுபட்டதடி கருவேரறுத்தாண்டி. (௧௮)

ஓங்காரங்கெட்டதடி வுள்ளதெல்லாம்போச்சுதடி
ஆங்காரங்கெட்டதடி யடியோடறுத்தாண்டி. (௧௯)

தரையாங்குடிலேமுதல்தட்டுருவவெந்ததடி
இரையுமனத்திடும்பையெல்லாமறுத்தாண்டி. (௨0)

முன்னேவினையெல்லாமுழுதுமறுத்தாண்டி
தன்னையறியவேதானொருத்தியானேண்டி. (௨௧)

என்னையேநானறியவிருவினையுமீடழித்துத்
தன்னையறியத்தலமெனக்குச்சொன்னாண்டி. (௨௨)

தன்னையறிந்தேண்டி தனிக்குமரியானேண்டி
தன்னந்தனியேதனியிருக்கும்பக்குவமோ. (௨௩)

வீட்டிலொருவரில்லேவெட்டவெளியானேண்டி
காட்டுக்கெறித்தநிலாகனவாச்சேகண்டதெல்லாம். (௨௪)

நகையாரோகண்டவர்கள்நாட்டுக்குப்பாட்டலவோ
பகையாரோகண்டவர்கள்பார்த்தாருக்கேச்சலவோ. (௨௫)

இந்நிலமைகண்டாண்டி யெங்குமிருந்தாண்டி
கன்னியழித்தாண்டி கற்பைக்குலைத்தாண்டி. (௨௬)

கற்புக்குலைத்தமையுங்கருவேரறுத்தமையும்
பொற்புக்குலைத்தமையும்போதமிழந்தமையும். (௨௭)

என்னவினைவருமோவின்னமெனக்கென்றறியேன்
சொன்னசொல்லெல்லாம்பலித்ததடி சோர்வறவே. (உ

கங்குல்பகலற்றிடத்தேகாட்டிக்கொடுத்தாண்டி
பங்கமழித்தாண்டிபார்த்தானைப்பார்த்திருந்தேன். (உ

சாதியிற்கூட்டுவரோசாத்திரத்துக்குள்ளாமோ
ஓதியுணர்ந்ததெல்லாமுள்ளபடியாச்சுதடி. (௩

என்னகுற்றஞ்செய்தனோவெல்லாருங்காணாமல்
அன்னைசுற்றமெல்லாமறியாரோவம்புவியில். (௩

கொன்றுரைத்தின்றேனோதின்றுரைக்கொன்றேனோ
எண்ணுதெல்லாமெண்ணுமிச்சைமறந்தேனே. (௩உ

சாதியிற்கூட்டுவரோசமயத்தோரெண்ணுவரோ
பேதித்துவாழ்ந்ததெல்லாம்பேச்சுக்கிடமாச்சுதடி. (௩௩

கண்டார்க்குப்பெண்ணலவோகாணார்க்குக்காமமடி
உண்டார்களுண்டதெலாமுணல்லாதுண்பர்களோ. (௩௪

கொண்டார்கள்கொண்டதெல்லாங்கொள்ளாதார்கொள்ளுவரோ
விண்டவர்கள்கண்டவரோகண்டவர்கள்விண்டவரோ. (௩௫

பண்டாயநான்மறைகள்பாடும்பரிசலவோ
தொண்டாயதொண்டருளந்தோற்றியொடுங்குமதோ. (௩௬

ஓதவரிதோவொருவருணர்வரிதோ
பேதமறவெங்கும்விளங்கும்பெருமையன்காண். (௩௭

வாக்குமனமுங்கடந்தமனோலயன்காண்
நோக்கவரியவன்காணுண்ணியரினுண்ணியன்காண். (௩௮

கல்வியல்லகேள்வியல்லகைகாட்டுங்காரணங்காண்
எல்லையளவற்றதடியெங்குநிறைந்ததடி.

வாசாமகோசரத்தைதமருவியிடங்கொண்டாண்டி
ஆசூசமில்லாண்டியறிவுக்கறிவாண்டி.

பத்துத்திசைக்குமடங்காப்பருவமடி
எத்திசைக்குமெங்குமிடைவிடாதேகமடி.

தித்திக்கவூறுமடிசித்தமுடையார்க்குப்
பத்திக்கடலுட்பதித்தபரஞ்சோதியடி.

உள்ளுணர்வாய்நின்றவர்தமுணர்வுக்குணர்வாண்டி
எள்ளளவுமுள்ளதிலேயேறிக்குறையாண்டி.

தூருந்தலையுமிலான்றோற்றமொடுக்கமிலான்
ஆருமறியாமலகண்டமாய்நின்றாண்டி.

எத்தனையோவண்டத்திருந்தவர்களெத்தனைபேர்
அத்தனைபேருண்டாலுமணுவுங்குறையாண்டி.

வாக்குமனமும்வடிவுமிலாவான்பொருள்காண்
போக்கும்வரவுமிலான்பொருவரியபூரணன்காண்.

காட்சிக்கெளியான்காண்கண்டாலிங்காளுன்காண்
மாட்சிமனம்வைத்தார்க்குமாணிக்கத்துள்ளொளிகாண்.

வாழ்த்தியவனைவழிபட்டால்மன்னுயிர்கள்
தோற்றவரியான்காண்சொல்லிறந்தசோதியன்காண்.

ஐயமறுத்தவனையாராய்வாருண்டானால்
வையகத்தேவந்துமலர்ப்பாதம்வைத்திடுவான்.

அணுவுக்குமேருவுக்குமகம்புறமாய்நின்றான்காண்
கணுமுற்றஞானக்கரும்பின்றெளிவான்காண். (௬௧)

எந்நாளுமிந்நாளுமிப்படியாயப்படியாய்ச்
சொன்னாலுங்கேளான்காண்சோத்திரத்திற்கொள்ளான்காண். (௬௨)

ஆத்தாளுக்காத்தாளாமப்பனுக்குமப்பனுமாம்
கோத்தார்க்குக்கோத்தநிலைகொண்டகுணக்கடல்காண். (௬௩)

இப்போபுதிதோடியெத்தனைநாளுள்ளதடி
அப்போதைக்கப்போதருளறிவுந்தந்தாண்டி. (௬௪)

பற்றற்றார்பற்றாகப்பற்றியிருந்தாண்டி
குற்றமறுத்தாண்டிகூடியிருந்தாண்டி. (௬௫)

வெட்டவெளியிலெனைமேவியிருந்தாண்டி
பட்டப்பகலிலடிபார்த்திருந்தாரெல்லோரும்; (௬௬)

வாழ்வானவாழ்வெனக்குவந்ததடிவாழாமல்
தாழாமற்றாழ்ந்தேண்டிசற்றுங்குறையாமல். (௬௭)

பொய்யானவாழ்வெனக்குப்போதுமெனக்காணேண்டி
மெய்யானவாழ்வெனக்குவெறும்பாழாய்விட்டதடி. (௬௮)

கன்னியழித்தவனைக்கண்ணாரக்கண்டேண்டி
என்னியல்புநானறியேனீதென்னமாயமடி. (௬௯)

சொல்லாலேசொல்லுதற்குச்சொல்லவாயில்லையடி
எல்லாருங்கண்டிருந்துமிப்போதறியார்கள். (௭௦)

கண்மாயமிட்டாண்டிகருத்துமிழந்தேண்டி
யுண்மாயமிட்டவனையுருவழியக்கண்டேண்டி. (௭௧)

என்னசொல்லப்போறேனினிந்தவதிசயத்தை
கன்னியிளங்கமுகுகாய்த்ததடி கண்ணூர. (6

ஆர்ந்தவிடமத்தனையுமருளாயிருக்குமடி
சார்ந்தவிடமெல்லாஞ்சவாதுமணக்குதடி. (6

இந்தமணமெங்குமியற்கைமணமென்றறிந்து
அந்தசுகாதீதத்தருட்கடலில்மூழ்கினண்டி. (எ

இரும்புநிறைநீர்போலவெனைவிழுங்கிக்கொண்டாண்டி
அரும்புநிறைவாசனைபோலன்றேயிருந்தாண்டி. (எ

அக்கினிகற்பூரத்தைஅறவிழுங்கிக்கொண்டாற்போல்
மக்கினம்பட்டுள்ளேமருவியிருந்தாண்டி. (எ

கடல்நீருமாறும்போற்கலந்துகரைகாணேண்டி
உடலுமுயிரும்போலுட்கலந்துநின்றாண்டி. (எ

பொன்னுமுரைமாற்றும்போற்பொருவரியபூரணன்காண்
மன்னுமறுபூதியடிமாணிக்கத்துள்ளொளிபோல். (எ

கங்குகரையில்லாண்டி கரைகாணக்கப்பலடி
எங்குமளவில்லாண்டி யேகமாய்நின்றாண்டி. (எ

தீவகம்போலென்னைச்சேர்ந்தபரசின்மயன்காண்
பாவகமொன்றில்லாண்டி பார்த்திடமெல்லாம்பரங்காண். (அ

உள்ளார்க்குமுள்ளாண்டி யூருமில்லான்பேருமில்லான்
கள்ளப்புலனறுக்கக்காரணமாய்வந்தாண்டி. (அ

அப்பிறப்புக்கெல்லாமருளாயமர்ந்தாண்டி
இப்பிறப்பில்வந்தானிவனுருமெய்ப்பொருள்காண் (அ

நீரொளிபோலெங்குநிறைந்தநிராமயன்காண்
பாரொளிபோலெங்கும்பரந்தபராபரன்காண். (அரு)

நூலாலுணர்வரியநுண்மையினுநுண்மையன்காண்
பாலாருசர்க்கரைபோற்பரந்தபரிபூரணன்காண். (அச)

உளக்கண்ணுக்கல்லாதான்கண்ணுலோருமதோ
விளக்குச்சுடரொளிபோன்மேவியிருந்தாண்டி. (அரு)

கல்லுளிருந்தகனலொளிபோற்காரணமாய்ப்
புல்லியிருந்தும்பொருவரியபூரணன்காண். (அசு)

பொற்பூவும்வாசனைபோற்போதம்பிறந்தார்க்குக்
கற்பூவும்வாசனைபோற்காணுக்கயவருக்கு. (அஎ)

மைக்குழம்புமுத்தும்போன்மருவிமறவாதவர்க்குக்
கைக்குட்கனியாகுங்கருவறுத்தகாரணர்க்கு. (அஅ)

பளிங்கிற்பவளமடிபற்றற்றபாவலர்க்குக்
கிளிஞ்சிலைவெள்ளியென்பார்கிட்டாதார்கிட்டுவரோ. (அக)

எட்டெக்கடங்காண்டியெழுத்திற்பிறவாண்டி
நாட்டினரிகளெல்லாநற்புரவிசெய்தாண்டி. (கூ0)

பஞ்சப்பிரளயத்துமிஞ்சியிருப்பாண்டி
நஞ்சுபொதிமிடற்றனயனத்தழல்விழியாள். (கூக)

அகங்காக்கும்புறங்காக்குமளவிலாவண்டமுதல்
செகங்காக்குங்காணுத்திசைபத்துங்காக்குமடி. (கூஉ)

பேசாப்பிரமமடிபேச்சிறந்தபேரொளிகாண்
ஆசபாசங்களணுகாதபேரொளிகாண். (கூ௩)

தேசமிறந்தவன்காண் திசையிறந்ததெண்கடல்காண்
ஊசிமுனையூன்றவில்லாவுறுபொருள்காண். (கூ

சிப்பியின்முத்தொளிகாண்சின்மயநோக்கில்லார்க்கு
அப்பிலொளிபோலமர்ந்தவரும்பொருள்காண். (கூ

ஆலாவிருட்சமடியளவிலாச்சாகையடி
மேலாம்பதங்கள்விசும்பூடுருவுமெய்ப்பொருள்காண். (கூ

வங்கிஷமெல்லாங்கடந்துமருவாமலர்ப்பதங்காண்
அங்குஷமாயெங்கும்ஆய்ந்தவரும்பொருள்காண். (கூ

நாமநட்டமானதடி நவிலவிடமில்லையடி
காமனைக்கண்ணாலெரிக்கக்கனல்விழித்தகாரணன்காண். (கூ

கொட்டாதசெம்பொனடி குளியாத்தாளமடி
எட்டாதகொம்பிலடியீப்புகாத்தேனமுதம். (கூ

காணிப்பொன்னாணியுடன்கல்லுரைமாற்றின்னதென்றே
ஆணியுடன்கூட்டியடங்கவிட்டுக்கொண்டாண்டி. (௧௦௦

அளவிறந்தவண்டத்தாரத்தனைபேருண்டாலும்
பிளவளவுந்தான்சற்றும்பேசாப்பிரமமடி. (௧௦௧

கன்னெஞ்சினுள்ளேகழுநீலம்பூத்தாப்போல்
என்னெஞ்சினுள்ளேயிணையடிகள்வைத்தாண்டி. (௧௦௨)

வேதப்புரவியடிவிரைந்தோடிபும்மறியார்
காதற்றஞானமடிகாண்பார்கருத்துடையோர். (௧௦௩)

பாசவினையைப்படப்பார்த்தபார்வையுடன்
நேசத்தைக்காட்டியடிநில்லென்றுசொன்னாண்டி. (௧௦௪)

ஓசையொடுங்குமிடமோங்காரத்துள்ளொளிகாண்
பேசாதிருக்கும்பிரமமிதுவென்றாண்டி.

(௧௦௫)

சின்மயநன்னோக்காற்சிற்சுருபங்காட்டியெனைத்
தன்மயமாயாக்கியேதானவனாய்நின்றாண்டி.

(௧௦௬)

தானென்னைப்பார்த்தாண்டி தன்னைத்தானல்லாமல்
நானென்னசொல்லுவண்டி நவிலவிடமில்லையடி.

(௧௦௭)

இன்றிருந்துநாளைக்கிறக்கிறபேரெல்லாரும்
என்றுபரிபூரணத்திலினிதிருக்கச்சொன்னாண்டி.

(௧௦௮)

பார்க்கிலெளிதலவோபற்றற்றபற்றலவோ
ஆர்க்குமிடங்காட்டவவனிதனில்வந்தாண்டி.

(௧௦௯)

இத்தனைகாலமடியிறந்துபிறந்ததெல்லாம்
இத்தனையுமில்லையடியிரும்பினுறைநீரானேன்,

(௧௧௦)

எக்காலம்பட்டதடியிறந்துபிறந்ததெல்லாம்
அக்காலமெல்லாமழுந்தினேனரகில்.

(௧௧௧)

காலங்கழிந்ததடி கர்மமெல்லாம்போச்சுதடி
நாலுவகைக்கருவுநாமநட்டமாச்சுதடி.

(௧௧௨)

முப்பாழுக்கப்பால்முதற்பாழ்முழுமுதலாய்
இப்போதுவந்தான்காண்யெனைவிழுங்கிக்கொண்டான்காண்.

( )

பாலின்கணெய்யிருந்தாற்போலப்பரஞ்சோதி
ஆலிங்கனஞ்செய்தறவிழுங்கிக்கொண்டாண்டி.

(௧௧௪)

தெத்தபடமானேண்டி தீயிரும்பினீரானேன்
ஒத்தவிடந்திரையென்றோதுமுணர்வறிந்தேன்.

(௧௧௫)

தேசமிறந்தவன்காண் திசையிறந்ததெண்கடல்காண்
ஊசிமுனையூன்றவில்லாவுறுபொருள்காண். (௪

சிப்பியின்முத்தொளிகாண்சின்மயநோக்கில்லார்க்கு
அப்பிலொளிபோலமர்ந்தவரும்பொருள்காண். (௫

ஆலாவிருட்சமடியளவிலாச்சாகையடி
மேலாம்பதங்கள்விசும்பூடுருவுமெய்ப்பொருள்காண். (௬

வங்கிஷமெல்லாங்கடந்துமருவாமலர்ப்பதங்காண்
அங்குஷமாயெங்கும்ஆய்ந்தவரும்பொருள்காண். (௭

நாமநட்டமானதடி நவிலவிடமில்லையடி
காமனைக்கண்ணாலெரிக்கக்கனல்விழித்தகாரணன்காண். (௮

கொட்டாதசெம்பொனடி குளியாத்தரளமடி
எட்டாதகொம்பிலடியீப்புகாத்தேனமுதம். (௯

காணிப்பொன்னணியுடன்கல்லுரைமாற்றின்னதென்றே
ஆணியுடன்கூட்டியடங்கவிட்டுக்கொண்டாண்டி. (௧

அளவிறந்தவண்டத்தாரத்தனைபேருண்டாலும்
பிளவளவுந்தான்சற்றும்பேசாப்பிரமமடி. (௧

கன்னெஞ்சினுள்ளேகழுநீலம்பூத்தாப்போல்
என்னெஞ்சினுள்ளேயிணையடிகள்வைத்தாண்டி. (௧௦

வேதப்புரவியடி விரைந்தோடியும்மறியார்
காதற்றஞானமடி காண்பார்கருத்துடையோர். (௧௦

பாசவினையைப்படப்பார்த்தபார்வையுடன்
நேசத்தைக்காட்டியடி நில்லென்றுசொன்னாண்டி. (௧௦

ஓசையொடுங்குமிடமோங்காரத்துள்ளொளிகாண்
பேசாதிருக்கும்பிரமமிதுவென்றாண்டி. (க0ரு)

சின்மயநன்னேக்காற்சிற்சுருபங்காட்டியெனைத்
தன்மயமாயாக்கியேதானவனாய்நின்றாண்டி. (க0சு)

தானென்னைப்பார்த்தாண்டி தன்னைத்தானல்லாமல்
நானென்னசொல்லுவண்டி நவிலவிடமில்லையடி. (க0எ)

இன்றிருந்துநாளைக்கிறக்கிறபேரெல்லாரும்
என்றுபரிபூரணத்திலினிதிருக்கச்சொன்னாண்டி. (க0அ)

பார்க்கிலெளிதலவோபற்றற்றபற்றலவோ
ஆர்க்குமிடங்காட்டவவனிதனில்வந்தாண்டி. (க0கூ)

இத்தனைகாலமடியிறந்துபிறந்ததெல்லாம்
இத்தனையுமில்லையடியிரும்பிலுறைநீரானேன். (கக0)

எக்காலம்பட்டதடியிறந்துபிறந்ததெல்லாம்
அக்காலமெல்லாம்அழுந்தினேனானாகில். (ககக)

காலங்கழிந்ததடி கர்மமெல்லாம்போச்சுதடி
நாலுவகைக்கருவுநாமநட்டமாச்சுதடி. (ககஉ)

முப்பாழுக்கப்பால்முதற்பாழ்முழுமுதலாய்
இப்போதுவந்தான்காண்யெனைவிழுங்கிக்கொண்டான்காண். ( )

பாலின்கணெய்யிருந்தாற்போலப்பரஞ்சோதி
ஆலிங்கனஞ்செய்தறவிழுங்கிக்கொண்டாண்டி. (ககச)

தெத்தபடமானேண்டி தீயிரும்பினீரானேன்
ஒத்தவிடமித்திரையென்றேதுமுணர்வறிந்தேன். (ககரு)

ஒப்புமுவமையுமற்ருேதவரிதாயபொருள்
இப்பூவினிற்குருவேயென்னவந்தோன்ருள்வாழி.

ஒப்பாரிசொல்லிடினுமுவமைபிழைத்திடினும்
முப்பாழுங்கற்றுணர்ந்தோர்முன்னோர்பொறுத்தருள்வார்.

அருட்புலம்பல் -- முற்றிற்று.

---

பட்டணத்துப்பிள்ளையார்

## இறந்தகாலத்திரங்கல்.

---

வார்த்தைதிறமில்லாமனிதருக்குப்புன்சொல்லாஞ்
சாத்திரங்கள்சொல்லிச்சதுரிழந்துகெட்டேனே.

மெத்தமெத்தச்செல்வாக்கில்வேறுமருளடுத்துத்
தத்தித்தலைகீழாய்த்தானடந்துகெட்டேனே.

வழக்கந்தலங்களினுமண்பொன்ஞைசையினும்
பழக்கந்தவிராமற்பதியிழந்துகெட்டேனே.

ஆணிபொருந்துமரும்பூமியத்தனையுங்
காணிநமதென்றுகனம்பேசிக்கெட்டேனே.

ஆசாரமில்லாவசடருடன்கூடிப்
பாசாங்குபேசிப்பதியிழந்துகெட்டேனே.

குருமார்க்கமில்லாக்குருடருடன்கூடிக்
கருமார்க்கத்துள்ளேகருத்தழிந்துகெட்டேனே.

ஆலமருந்துமரன்பெருமையெண்ணுமல்
பாலர்பெண்டீர்மெய்யென்றுபதியிழந்துகெட்டேனே.

பிணவாசமுற்றபெருங்காயமெய்யென்று
பணவாசையாலேபதியிழந்துகெட்டேனே. (அ)

கண்டபுலவர்கனக்கவேதான்புகழ
உண்டவுடம்பெல்லாமுப்பாரித்துக்கெட்டேனே. (கூ)

எண்ணிறந்தசென்மமெடுத்துச்சிவபூசை
பண்ணிப்பிழையாமற்பதியிழந்துகெட்டேனே. (க0)

சிற்றெறும்புசற்றுந்தீண்டப்பொறாவுடம்பை
உற்றுறுக்கவுஞ்சுடவுமொப்பித்துமாண்டேனே. (கக)

தன்னுடம்புதானேதனக்குப்பகையாமென்
றெண்ணுமுணர்வில்லாமலின்பமென்றுமாண்டேனே. (கஉ)

தோலெலும்புமாமிசமுந்தொல்லன்னத்தால்வளரு
மேலெலும்புஞ்சுற்றமென்றுவீறாப்பாய்மாண்டேனே. (கங)

போக்குவரத்தும்பொருள்வரத்துங்காணாமல்
வாக்கழிவுசொல்லிமனமறுகிக்கெட்டேனே. (கச)

இ ர ந் த கா ல த் தி ர ங் க ல்
முற்றிற்று.

---

பட்டணத்துப்பிள்ளையார்

# நெஞ்சொடுபுலம்பல்.

மண்காட்டிப்பொன்காட்டிமாயவிருள்காட்டிச்
செங்காட்டிலாடுகின்றதேசிகனைப்போற்றாமல்
கண்காட்டும்வேசியர்தங்கண்வலையிற்சிக்கிமிக
அங்காடிநாய்போலலைந்தனையேநெஞ்சமே. (க)

புட்பாசனவணையிற்பொர்பட்டுமெத்தையின்மேல்
ஒப்பாவணிந்தபணியோடாணிநீங்காமல்
இப்பாய்க்கிடத்தியியமனுயிர்கொள்ளுமுன்னே
மூப்பாழைப்போற்றிமுயங்கிலையேநெஞ்சமே.

மூப்பாழும்பாழாய்முதற்பாழ்வெறும்பாழாய்
அப்பாழுக்கப்பாணின்றடுமதைப்போற்றாமல்
இப்பாழாம்வாழ்வைநம்பியேற்றவர்க்கொன்றீயாமல்
அப்பாழாய்வந்தவினைசூழ்ந்தனையேநெஞ்சமே.

அன்னம்பகிர்ந்திங்கலைந்தோர்க்குதவிசெயுஞ்
சென்மமெடுத்துஞ்சிவனருளைப்போற்றாமல்
பொன்னுமனையுமெழிற்பூவையருமவாழ்வுமிவை
இன்னுஞ்சதமாகவெண்ணினையேநெஞ்சமே.

முற்றொடர்பிற்செய்தமுறைமையால்வந்தசெல்வம்
இற்றைநாட்பெற்றோமென்றெண்ணாதுபாழ்மனமே
அற்றவர்க்குமீயாமலரன்பூசையோராமல்
கற்றவர்க்குமீயாமற்கண்மறந்துவிட்டனையே.

மாணிக்கமுத்துவயிரப்பணிபூண்டு
ஆணிப்பொன்சிங்காதனத்திலிருந்தாலும்
காணித்துடலைநமன்கட்டியேகைப்பிடித்தால்
காணிப்பொன்கூடவரக்காண்கிலமேநெஞ்சமே.

கற்கட்டுமோதிரநற்கடுக்கனரைஞாண்பூண்டு
இக்கெட்டும்போற்றத்திசைக்கொருத்தராளுனும்
பற்கிட்டவேமனுயிர்பந்தாடும்வேளையிலே
கைச்சட்டம்கூடவரக்காண்கிலமேநெஞ்சமே.

## நெஞ்சொடுபுலம்பல்.

முன்னநீசெய்ததவமுப்பாலுஞ்சேருமன்றிப்
பொன்னும்பணிதிகளும்பூவையுமங்கேவருமோ
தன்னைச்சதமாகச்சற்குருவைப்போற்றாமல்
கண்ணற்றவந்தகன்போற்காட்சியற்றாய்நெஞ்சமே.

பையரவம்பூண்டபரமர்திருப்பொற்றாளைத்
துய்யமலர்பறித்துத்தொழுதுவணங்காமல்
கையிலணிவளையுங்காலிலிடும்பாடகமும்
மெய்யென்றிறுமாந்துவிட்டனையேநெஞ்சமே.

மாதுக்கொருபாகம்வைத்தவரன்பொற்றாளைப்
போதுக்கொருபோதும்போற்றிவருந்தாமல்
வாதுக்குத்தேடியிந்தமண்ணிற்புதைத்துவைத்தே
ஏதுக்குப்போகநீயெண்ணினையேநெஞ்சமே.

அஞ்சருளைப்போற்றியைந்துபுலனைத்துறக்க
நெஞ்சேயுனக்குநினைவுநான்சொல்லுகிறேன்
வஞ்சகத்தைநீக்கிமறுநினைவுவாராமல்
செஞ்சரணத்தாளைச்சிந்தைசெய்வாய்நெஞ்சமே.

அற்புதமாயிந்தஉடலாவியடங்குமுன்னே
சற்குருவைப்போற்றித்தவம்பெற்றுவாழாமல்
உற்பத்திசெம்பொன்உடைமைபெருவாழ்வைநம்பிச்
சர்ப்பத்தின்வாயிற்றவளைபோலானேனே.

உற்றார்பெற்றாருடன்பிறப்பார்பிள்ளைகளார்
மற்றாரிருந்தாலென்மாளும்போதுதவுவரோ
கற்றாவிழந்தவிளங்கன்றதுபோலேயுருகிச்
சிற்றாகிச்சிற்றின்பஞ்சேர்ந்தனையேநெஞ்சமே.

வீடிருக்கத்தாயிருக்கவேண்டுமனையாளிருக்கப்
பீடிருக்கவூணிருக்கப்பிள்ளைகளுந்தாமிருக்க
மாடிருக்கக்கன்றிருக்கவைத்தபொருளிருக்கக்
கூடிருக்கநீபோனகோலமென்னகோலமே.

சந்தனமுங்குங்குமமுஞ்சாந்தும்பரிமளமும்
விந்தைதகளாப்பூசிமிகுவேடிக்கையொய்யாரக்
கந்தமலர்சூடுகின்றகன்னியருந்தாமிருக்க
எந்தவகைபோறுயென்றெண்ணிலையேநெஞ்சமே.

காற்றுத்துருத்திகடியவினைக்குள்ளான
ஊற்றைச்சடலத்தையுண்டென்றிறுமாந்து
பார்த்திரங்கியன்னம்பசித்தோருக்கீயாமல்
ஆற்றுவெள்ளம்போலவளாவினையேநெஞ்சமே.

நீர்க்குமிழிவாழ்வைநம்பிநிச்சயமென்றேயெண்ணிப்
பார்க்களவாமன்னம்பசித்தோர்க்களியாமல்
போர்க்குளெமதூதன்பிடித்திழுக்கும்போது
ஆர்ப்படுவாரென்றேயறிந்திலையேநெஞ்சமே.

சின்னஞ்சிறுநுதலாள்செய்தபலவினையால்
முன்னந்தமார்பின்முளைத்தசிலந்திவிம்மி
வன்னந்தளதளப்பமயங்கிவலைக்குள்ளாகி
அன்னம்பகிர்ந்துண்ணவறிந்திலையேநெஞ்சமே.

ஓட்டைத்துருத்தியையுடையும்புழுக்கூட்டை
ஆட்டுஞ்சிவசித்தருளைமிகப்போற்றியே
வீட்டைத்திறந்துவெளியையொளியாலழைத்துக்
காட்டும்பொருளிதென்றுகருதிலையேநெஞ்சமே.

ஊன்பொதிந்தகாயமுளைந்தபுழுக்கூட்டைத்
தான்சுமந்ததல்லால்நீசற்குருவைப்போற்றாமல்
கான்பரந்தவெள்ளங்கரைபுரளக்கண்டேகி
மீன்பரந்தாற்போலேவிசாரமுற்றாய்நெஞ்சமே. (உ0)

உடக்கையொருக்கியுயிரையடைத்துவைத்த
சடக்கைச்சதமென்றுசார்ந்தங்கிறுமாந்தை
உடக்கைத்தகர்த்தேயுயிரையமன்கொள்கையிலே
யடக்கமாய்வைத்தபொருளங்குவரமாட்டாதே. (உக)

இத்திக்குந்தேனைத்தெவிட்டாததெள்ளமுதை
முத்திக்குவித்தானமுப்பாழைப்போற்றாமல்
பற்றிப்பிடித்தியமன்பாசத்தாற்கட்டும்வண்ணம்
சுற்றியிருக்கும்வினைசூழ்ந்தனையேநெஞ்சமே. (உஉ)

அஞ்செழுத்தாயெட்டெழுத்தாயைம்பத்தோரட்சரமாய்ப்
பிஞ்செழுத்தாய்நின்றபெருமானைப்போற்றாமல்
வஞ்சகமாயுற்றமுலைமாதர்வலைக்குள்ளாகிப்
பஞ்சரித்துத்தேடிப்பாழுக்கிறைத்தோமே. (உ௩)

அக்கறுகுகொன்றைதும்பையம்புலியுஞ்சூடுகின்ற
சொக்கர்திருத்தாளைத்தொழுதுவணங்காமல்
மக்கள்பெண்டிர்சுற்றமுடன்வாழ்வைமிகநம்பியன்பாய்
எக்காலமுமுண்டென்றெண்ணினையேநெஞ்சமே. (உ௪)

ஆண்டகுருவினருளைமிகப்போற்றி
வேண்டுகயிலாயவீட்டுவழிபாராமல்
பூண்டகுழன்மாதுநல்லார்பொய்மாய்கைக்குள்ளாகித்
தூண்டிலகப்பட்டுத்துடிகெண்டையானேனே. (உ௫)

எணிப்பழுவாமிருளையறுத்தாளமுற்றும்
பேணித்தொழுங்கயிலைபேறுபெறமாட்டாமல்
காணவரும்பொருளாய்க்கண்கலக்கப்பட்டடியேன்
ஆணியற்றமாமரம்போலாகினனேநெஞ்சமே. (௨

கோத்துப்பிரகாசங்கொண்டுருகியண்டமெல்லாம்
காத்தபடியேகயிலாயஞ்சேராமல்
வேற்றுருவப்பட்டடியேன்வெள்ளம்போலுள்ளுருகி
ஏற்றுங்கழுவிலிருந்தபிணமானேனே. (௨௬

நிலைவிட்டுடலையுயிர்நீங்கியகலுமுன்னே
சிலைதொட்டவேடனைச்சிற்றின்றனைச்சேராமல்
வலைபட்டுழலுகின்றமான்போற்பரதவித்து
தலைகெட்டநூலதுபோற்றட்டழிந்தாய்நெஞ்சமே. (௨௮

முடிக்குமயிர்ப்பொல்லாமுழுக்குரம்பைமின்னாரின்
இடைக்குநடைக்குமிதங்கொண்டவார்த்தைசொல்லி
அடிக்கொண்டதில்லைவனத்தையனேநாயனையேன்
விடக்கையிழந்தமிருகமதுவானேனே. (௨௯)

பூவாணர்போற்றும்புகழ்மதுரைச்சொக்கரது
சீர்பாதம்போற்றிச்சிவலோகஞ்சேராமல்
தாவாரந்தோறுந்தலைபுகுந்தநாய்போலே
ஆகாதநெஞ்சமேயலைந்துதிரிந்தாயே. (௩௦)

பத்தெட்டாயீரைந்தாய்ப்பதின்மூன்றிரண்டொன்றாய்
ஒத்திட்டுநின்றதோரோவியத்தைப்போற்றாமல்
தெத்திட்டுநின்றதிரிகண்ணிக்குள்ளாகி
வித்திட்டாய்நெஞ்சேவிட்டுமறியாயே. (௩௧)

# நெஞ்சொடுபுலம்பல்.

அஞ்சுமுருவாகியைமூன்றுமெட்டுமொன்றாய்
மிஞ்சியிருந்தவிளக்கொளியைப்போற்றாமல்
பஞ்சிலிடுவன்னியைப்போற்பற்றிப்பிடியாமல்
நஞ்சுண்டகெண்டையைப்போல்நானலைந்துகெட்டேனே

ஊனமுடனேயுடையும்புழுக்கூட்டை
மானமுடனேசுமந்துமண்ணுலகின்மாளாமல்
ஆனதொருபஞ்சவர்களாண்டிருந்ததேசம்விட்டுப்
போனதுபோலேநாம்போய்ப்பிழைத்தோமில்லையே.

ஊறையிறைக்கின்றவுப்பிருந்தபாண்டத்தை
நாறுமல்நாறிநழுவும்புழுக்கூட்டை
வீறும்புரத்தைவிரும்புகின்றதெப்படியென்
றாறுதநாட்டிலகன்றிருந்தேனில்லையே.

அரியவரிதேடியறியாவொருமுதலைப்
பரிவுடனேபோற்றும்பரஞ்சுடரைப்போற்றாமல்
கரியபெருவாழ்வைநம்பிக்காமத்தழுந்தியே
அரிவாயிற்பட்டகரியதுபோலானேனே.

தந்திரத்தையுன்னித்தவத்தைமிகநிறுத்தி
மந்திரத்தையுன்னிமயங்கித்தடுமாறி
விந்துருகிநாதமாமேலொளியைக்காணாமல்
அந்தரத்தேகோலெறிந்தவந்தகன்போலானேனே.

விலையாகிப்பாணனுக்குவீறடிமைப்பட்டதுபின்
சிலையார்கைவேடனெச்சிற்றின்றானைப்போற்றாமல்
அலைவாய்த்துரும்பதுபோலாணவத்தினாலழுங்கி
யுலைவாய்மெழுகதுபோலுருகினையேநெஞ்சமே.

நெஞ்சொடுபுலம்பல் முற்றிற்று.

## பட்டணத்துப்பிள்ளையார் அருளிச்செய்த
## பூரணமாலை.

---

மூலத்துதித்தெழுந்தமுக்கோணசக்கரத்துள்
வாலைதனைப்போற்றாமல்மதிமறந்தேன்பூரணமே.

உந்திக்கமலத்துதித்துநின்றபிரமாவைச்
சந்தித்துக்காணாமற்றட்டழிந்தேன்பூரணமே.

நாவிக்கமலநடுநெடுமால்காணாமல்
ஆவிகெட்டியானுமறிவழிந்தேன்பூரணமே.

உருத்திரனையிருதயத்திலுண்மையுடன்பாராமல்
கருத்தழிந்துநானுங்கலங்கினேன்பூரணமே.

விசுத்திமயேசுரனைவிழிதிறந்துபாராமல்
பசித்துருகிநெஞ்சம்பதறினேன்பூரணமே.

நெற்றிவிழியுடையநிர்மலசதாசிவத்தைப்
புத்தியுடன்பாராமற்பொறியழிந்தேன்பூரணமே.

நாதவிந்துதன்னைநயமுடனேபாராமல்
போதமயங்கிப்பொறியழிந்தேன்பூரணமே.

உச்சிவெளியையுறுதியுடன்பாராமல்
அச்சமுடனானுமறிவழிந்தேன்பூரணமே.

மூக்குமுனையைமுழித்திருந்துபாராமல்
ஆக்கைகெட்டுநானுமறிவழிந்தேன்பூரணமே.

இடைபிங்கலையினியல்பறியமாட்டாமல்
தடையுடனேயானுந்தயங்கினேன்பூரணமே.

## பூரணமாலை.

ஊனுக்குணீநின்றுலாவினதைக்காணாமல்
நானென்றிருந்துநலனழிந்தேன்பூரணமே.

மெய்வாழ்வைநம்பிவிரும்பிமிகவாழாமல்
பொய்வாழ்வைநம்பிப்புலம்பினேன்பூரணமே.

பெண்டுபிள்ளைதந்தைதாய்பிறவியுடன்சுற்றமிவை
யுண்டென்றுநம்பியுடலழிந்தேன்பூரணமே.

தண்டிகைபல்லாக்குடனேசகலசம்பத்துகளும்
உண்டென்றுநம்பியுணர்வழிந்தேன்பூரணமே.

இந்தவுடலுயிரையெப்போதுந்தான்சதமாப்
பந்தமுற்றுநானும்பதமழிந்தேன்பூரணமே.

மாதர்பிரபஞ்சமயக்கத்திலேவிழுந்து
போதமயங்கிப்பொறியழிந்தேன்பூரணமே.

சரியைகிரியாயோகந்தான்ஞானம்பாராமல்
பரிதிகண்டமதியதுபோற்பயனழிந்தேன்பூரணமே.

மண்பெண்பொன்னாசைமயக்கத்திலேவிழுந்து
கண்கெட்டமாடதுபோற்கலங்கினேன்பூரணமே.

தனிமுதலைப்பார்த்துத்தனித்திருந்துவாழாமல்
அனியாயமாய்ப்பிறந்திங்கலைந்துநின்றேன்பூரணமே

ஈராறுதண்கலைக்குளிருந்துகூத்தாடினதை
ஆராய்ந்துபாராமலறிவழிந்தேன்பூரணமே.

வாசிதனைப்பார்த்துமகிழ்ந்துனைத்தான்போற்றாமல்
காசிவரைபோய்த்திரிந்துகாலலுத்தேன்பூரணமே.

கருவிகடொண்ணூற்றாறிற்கலந்துவிளையாடினதை
இருவிழியாற்பாராமலீடழிந்தேன்பூரணமே.

உடலுக்குள்நீநின்றுலாவினதைக்காணாமல்
கடமலைதோறுந்திரிந்துகாலலுத்தேன்பூரணமே.

எத்தேசகாலமுநாமிறவாதிருப்பமென்று
உற்றுனைத்தான்பாராமலுருவழிந்தேன்பூரணமே.

எத்தனைதாய்தந்தையிவர்களிடத்தேயிருந்து
பித்தனுயானும்பிறந்திறந்தேன்பூரணமே.

பெற்றலுத்தாள்தாயார்பிறந்தலுத்தேன்யானுமுன்றன்
பொற்றுணைத்தாள்தந்துபுகலருள்வாய்பூரணமே.

உற்றாரழுதலுத்தாருறன்முறையார்சுட்டலுத்தார்
பெற்றலுத்தாள்தாயார்பிறந்தலுத்தேன்பூரணமே.

பிரமன்படைத்தலுத்தான்பிறந்திறந்துநானலுத்தேன்
உரமுடையவக்கினிதானுண்டலுத்தான்பூரணமே.

எண்பத்துநான்குநூறாயிரஞ்செனனமுஞ்செனித்துப்
புண்பட்டுநானும்புலம்பினேன்பூரணமே.

என்னையறியாமலெனக்குள்ளேநீயிருக்க
உன்னையறியாமலுடலிழந்தேன்பூரணமே.

கருவாயுருவாய்க்கலந்துலகெலாநீயாய்
அருவாகிநின்றதறிகிலேன்பூரணமே.

செம்பொற்கமலத்திருவடியைப்போற்றாமல்
பம்பைகொட்டவாடும்பசாசானேன்பூரணமே.

## பூரணமாலை.

எனக்குள்ளேநீயிருக்கவுனக்குள்ளேநானிருக்க
மனக்கவலை தீரவரமருள்வாய்பூரணமே.

எழுவகைத்தோற்றத்திருந்திவிளையாடினதைப்
பழுதறவேபாராமற்பயனிழந்தேன்பூரணமே.

சாதிபேதங்கள்தனையறியமாட்டாமல்
வாதனையால்நின்றுமயங்கினேன்பூரணமே.

குலமொன்றாய்நீபடைத்தகுறியையறியாமல்யான்
மலபாண்டத்துள்ளிருந்துமயங்கினேன்பூரணமே.

அண்டபிண்டமெல்லாமணுவுக்கணுவாகநீ
கொண்டவடிவின்குறிப்பறியேன்பூரணமே.

சகஸ்திரத்தின்மேலிருக்குஞ்சற்குருவைப்போற்றாம
லகத்தினுடையாணவத்தாலறிவழிந்தேன்பூரணமே.

ஐந்துபொறியையடக்கியுனைப்போற்றாமல்
நைந்துருகிநெஞ்சாடுங்கினேன்பூரணமே.

என்னைத்திருக்கூத்தாவிப்படிநீயாட்டுவித்தாய்
உன்னையறியாதுடலழிந்தேன்பூரணமே.

நரம்புதசைதோலெலும்புநாற்றத்துக்குள்ளிருந்து
வரம்பறியமாட்டாமல்மயங்கினேன்பூரணமே.

சிலந்தியுடைநூல்போற்சிவசெந்துக்குள்ளிருந்த
நலந்தனைத்தான்பாராமல்நலமழிந்தேன்பூரணமே.

குருவாய்ப்பரமாகிக்குடிலைசத்திநாதவிந்தாய்
அருவாயுருவானதறிகிலேன்பூரணமே.

ஒளியாய்க்கதிர்மதியாயுள்ளிருளாயக்கினியாய்
வெளியாகிநின்றவியனறியேன்பூரணமே.

இடையாகிப்பிங்கலையாயெழுந்தசுழுமுனையாய்
உடலுயிராய்நீயிருந்தவுளவறியேன்பூரணமே.

மூலவித்தாய்நின்றுமுளைத்துடல்தோறுமிருந்து
காலனெனவழிக்குங்கணக்கறியேன்பூரணமே.

உள்ளும்புறம்புமாயுடலுக்குள்நீயிருந்த
தெள்ளவுநானறியாதிருந்தேனேபூரணமே.

தாயாகித்தந்தையாய்த்தமர்கிளைஞர்சுற்றமெல்லாம்
நீயாகிநின்றநிலையறியேன்பூரணமே.

விலங்குபுள்ளூர்வனவசரம்விண்ணவர்நீர்ச்சாதிமனுக்
குலங்களெழுவகையில்நின்றகுறிப்பறியேன்பூரணமே.

ஆணாகிப்பெண்ணாயலியாகிவேற்றுருவாய்
மாணாகிநின்றவகையறியேன்பூரணமே.

வாலையாய்ப்பக்குவமாய்வளர்ந்துகிழந்தானாகும்
பாலையாய்நின்றபயனறியேன்பூரணமே.

பொய்யாய்ப்புவியாய்ப்புகழ்வாரிதியாகி
மெய்யாகிநின்றவியனறியேன்பூரணமே.

பூவாய்மணமாகிப்பொன்னாகிமாற்றாகி
நாவாய்ச்சொல்லானநயமறியேன்பூரணமே.

முதலாய்நடுவாகிமுப்பொருளாய்மூன்றுலகா
யிதமாகிநின்றவியலறியேன்பூரணமே.

ஊனாயுடலுயிராயுண்ணிறைந்தகண்ணொளியாய்த்
தேனாய்ருசியானதிறமறியேன்பூரணமே. (ருரு)

வித்தாய்மரமாய்விளைந்தகனிகாய்ப்பூவாய்ச்
சித்தாகிநின்றதிறமறியேன்பூரணமே. (ருசா)

ஐவகையும்பெற்றுலகவண்டபகிரண்டமெல்லாந்
தெய்வமெனநின்றதிறமறியேன்பூரணமே. (ருஎ)

மனமாய்க்கனவாகிமாயைகையாயுள்ளிருந்து
நினைவாகிநின்றநிலையறியேன்பூரணமே. (ருஅ)

சத்திசிவமிரண்டாய்த்தானுமுடிவிலொன்றாகிச்
சித்திரமாய்நின்றதிறமறியேன்பூரணமே. (ருகூ)

பொறியாய்ப்புலனாகிப்பூதபேதப்பிரிவாய்
அறிவாகிநின்றவாவறியேன்பூரணமே. (சாo)

வானிற்கதிர்மதியாய்வளர்ந்துபின்னொன்றானதுபோல்
ஊனுடலுக்குள்ளிருந்தவுயிர்ப்பறியேன்பூரணமே. (சாக)

பொய்யும்புலையுமிகப்பொருந்திவீண்பேசலன்றி
ஐயோவுனையுரைக்கவறிகிலேன்பூரணமே. (சாஉ)

நிரந்தரமாயொன்றாகிநின்றுவிளையாடினதைப்
பரமதுவேயென்னப்பதமறியேன்பூரணமே. (சாங)

கொல்வாய்ப்பிறப்பாய்க்கூடவிருந்தேசுகிப்பாய்
செல்வாய்ப்பிறர்க்குட்செயலறியேன்பூரணமே. (சாச)

வாரிதியாய்வையமெல்லாமன்னுமண்டபிண்டமெல்லாஞ்
சாருதியாய்நின்றதலமறியேன்பூரணமே. (சாரு)

வித்தாய்மரமாய்வெளியாயொளியாய்நீ
சத்தாயிருந்ததரமறியேன்பூரணமே. (௬

தத்துவத்தைப்பார்த்துமிகத்தன்னையறிந்தறிவால்
உய்த்துனைத்தான்பாராமலுய்வாரோபூரணமே. (௬

ஒன்றாயுயிராயுடல்தோறுநீயிருந்தும்
என்றுமறியார்களேழைகள்தாம்பூரணமே. (௬

நேற்றென்றுநாளையென்றுநினைப்புமறப்பாய்ப்படைத்து
மாற்றமாய்நின்றவளமறியேன்பூரணமே. (௬

மனம்புத்திசித்தமகிழறிவாங்காரமதாய்
நினைவாந்தலமானநிலையறியேன்பூரணமே. (

உருப்பேதமின்றியுயர்ந்தசத்தபேதமதாய்க்
குருபேதமாய்வந்தகுணமறியேன்பூரணமே. (

சட்சமயபேதங்கள்தான்வகுத்துப்பின்னுமொரு
உட்சமயமுண்டென்றுரைத்தனையேபூரணமே. (

முப்பத்திரண்டறுப்பாய்முனைந்துபடைத்துள்ளிருந்த
செப்படுவித்தைத்திறமறியேன்பூரணமே. (

என்னதான்கற்றாலென்னெப்பொருளும்பெற்றாலென்
உன்னையறியாதாருய்வரோபூரணமே. (

கற்றறிவோமென்பார்காணார்களுன்பதத்தைப்
பெற்றறியார்தங்களுக்குப்பிறப்பறுமோபூரணமே. (

வானென்பாரண்டமென்பார்வாய்ஞானமேபேசித்
தானென்பார்வீணர்தனையறியார்பூரணமே. (

ஆதியென்பாரந்தமென்பாரதற்குண்டுவாயிருந்த
சோதியென்பார்நாதத்தொழிலறியார்பூரணமே. (எஎ)

மூச்சென்பாருள்ளமென்பார்மோனமெனுமோட்சமென்பார்.
பேச்சென்பாருன்னுடையபேரறியார்பூரணமே. (எஅ)

பரமென்பார்பானுவென்பார்பாழ்வெளியாய்நின்ற
வரமென்பாருன்றன்வழியறியார்பூரணமே. (எகூ)

எத்தனைபேரோவெடுத்தெடுத்துத்தானுரைத்தார்
அத்தனைபேர்க்கொன்றானதரிகிலேன்பூரணமே. (அ0)

நகாரமகாரமென்பார்நடுவேசிகாரமென்பார்
வகாரயகாரமென்பார்வகையறியார்பூரணமே. (அக)

மகத்துவமாய்க்காமமயக்கத்துக்குள்ளிருந்து
பகுத்தறியமாட்டாமற்பயனழிந்தேன்பூரணமே. (அஉ)

உண்மைப்பொருளையுகந்திருந்துபாராமற்
பெண்மயக்கத்தாலேபிறந்திறந்தேன்பூரணமே. (அ௩)

வாயாரவாழ்த்திமகிழ்ந்துனைத்தான்போற்றாமல்
ஞாயமெடுத்துக்கலங்கினேன்பூரணமே. (அ௪)

சந்திரனைமேகமதுதான்மறைத்தவாறதுபோற்
பந்தமுறயானுமுனைப்பார்க்கிலேன்பூரணமே. (அ௫)

செந்தாமரைத்தாளைத்தினந்தினமும்போற்றாமல்
அந்தரமாய்நின்றிங்கலைந்தேனன்பூரணமே. (அ௬)

நீர்மேற்குமிழிபோல்நிலையற்றகாயமிதைத்
தாரகமென்றெண்ணிநான்றட்டழிந்தேன்பூரணமே. (அஎ)

நெஞ்சமுருகிநினைத்துனைத்தான்போற்றிநெடு
வஞ்சகத்தைப்போக்கவகையறியேன்பூரணமே. (அ

என்னுக்குளெண்ணெய்போலெங்குநிறைந்திருந்த
துள்ளமறியாதுருகினேன்பூரணமே. (௯

மாயாப்பிரபஞ்சமயக்கத்திலேவிழுந்தே
யோயாச்சனனமொழித்திலேன்பூரணமே. (

பூசையுடன்புவனபோகமெனும்போக்கியத்தால்
ஆசையுற்றேநானுமறிவழிந்தேன்பூரணமே. (

படைத்துமழித்திடுவாய்பார்க்கிற்பிரமாவெழுத்தைத்
தொடைத்துச்சிரஞ்சீவியாத்துலங்குவிப்பாய்பூரணமே. (

மந்திரமாய்ச்சாத்திரமாய்மறைநான்காய்நீயிருந்த
தந்திரத்தைநானறியத்தகுமோதான்பூரணமே. ( )

அல்லாய்ப்பகலாயனவரதகாலமெனுஞ்
சொல்லாய்ப்பகுத்ததொடர்பறியேன்பூரணமே. ( )

நரகஞ்சுவர்க்கமெனநண்ணுமிரண்டுண்டாயும்
அரகராவென்பதறிகிலேன்பூரணமே. ( )

பாவபுண்ணியமென்னும்பகுப்பாய்ப்படைத்தழித்திங்
காவலையுண்டாக்கிவைத்தவருளறியேன்பூரணமே. ( )

சாந்தமென்றுங்கோபமென்றுஞ்சாதிபேதங்களென்றும்
பாந்தமென்றும்புத்தியென்றும்படைத்தனையேபூரணமே. ( )

பாசமுடலாய்ப்பசுவதுவுந்தானுயிராய்
நேசமுடனீபொருளாய்நின்றனையேபூரணமே. ( )

ஏதிலடியாரிரங்கியிகத்தில்வந்துன்
பாதமதில்தாழப்பரிந்தருள்வாய்பூரணமே. (௯௯)

நானேநீநீயேநானுமிரண்டுமொன்ருனால்
தேனின்ருசியதுபோற்றெவிட்டாய்பூரணமே. (௧௦௦)

முடிவிலொருருணியந்தைமுடிந்துநின்றுபாராமல்
அடியிலொருருணியத்திலலைந்தேனேபூரணமே. (௧௦௧)

பூரணமாலைதனைப்புத்தியுடனேதினர்க்குத்
தாரணியில்ஞானந்தழைப்பிப்பாய்பூரணமே. (௧௦௨)

பூரணமாலை முற்றிற்று.

---

# நெஞ்சொடுமகிழ்தல்.

அன்றுமுதலின்றளவுமாக்கைகயொடுகூட்சியுமாய்
நின்றநிலையறியநேரமுற்ருய்நெஞ்சமே. (௧)

அங்கங்குணர்வாயறிவாகியேநிரம்பி
எங்கெங்குமானநிலையேகரித்தாய்நெஞ்சமே. (௨)

அலையாதபேரின்பவானந்தவெள்ளத்தில்
நிலையாயுருவிறந்துநின்றனையேநெஞ்சமே. (௩)

பாராமற்பதையாமற்பருகாமல்யாதொன்றும்
ஓராதுணர்வுடனேயொன்றினையேநெஞ்சமே. (௪)

களவிறந்துகொலையிறந்துகாண்பனவுங்காட்சியும்போ
யளவிறந்துநின்றநிலையன்புற்ருய்நெஞ்சமே. (௫)

பேச்சிறந்துசுட்டிறந்துபின்னிறந்துமுன்னிறந்து
நீச்சிறந்துநின்றநிலேநேசமுற்றாய்நெஞ்சமே.

விண்ணிறந்துமண்ணிறந்துவெளியிறந்துவொளியிறந்து
எண்ணிறந்துநின்றநிலேயேகரித்தாய்நெஞ்சமே.

பார்த்தவிடமெங்கும்பரமெனவேயுட்புறம்புங்
கோத்தபடியுண்மையெனக்கொண்டனேயேநெஞ்சமே.

ஊரிறந்துபேரிறந்துவொளியிறந்துவெளியிறந்து
சீரிறந்துநின்றநிலேசேர்ந்தனேயேநெஞ்சமே.

ஆண்பெண்ணலியென்றழைக்கவரிதாய்நிறைந்து
காணவரிதாயவிடங்கண்ணுற்றாய்நெஞ்சமே.

ஆங்காரமச்சமகற்றியறிவிறேடு
தூங்காமற்றூங்கிச்சுகம்பெற்றாய்நெஞ்சமே.

ஆதியாய்நின்றவகண்டபரிபூரணத்தைச்
சாதியாநின்றவிடஞ்சார்வுற்றாய்நெஞ்சமே.

விருப்புவெறுப்பில்லாதவெட்டவெளியதனில்
இருப்பேசுகமென்றிருந்தனேயேநெஞ்சமே.

ஆருமுறாப்பேரண்டத்தப்புறத்துமிப்புறத்தும்
நீருமுப்புமென்னநிலேபெற்றாய்நெஞ்சமே.

உடலுகவேயிருந்துமுணரவரியானேடு
கடனீருமாறும்போற்கலந்தனேயேநெஞ்சமே.

நெடியகத்தைப்போக்கிநின்றசழக்கறுத்துப்
படிகத்துக்கும்பம்போற்பற்றினேயேநெஞ்சமே.

மேலாகியெங்கும்விளங்கும்பரம்பொருளிற்
பாலூறுமென்சுவைபோற்பற்றினையேநெஞ்சமே. (௧௭)

நீரொடுதண்ணாலிவிண்ணீரானவாறேபோல்
ஊரொடுபேரில்லாரோடொன்றினையேநெஞ்சமே. (௧௮)

இப்பிறப்பைப்பாழ்படுத்தியிருந்தபடியேயிருக்கச்
செப்பவரிதாயவிடஞ்சேர்ந்தனையேநெஞ்சமே. (௧௯)

மேலாம்பதங்களெல்லாம்விட்டுவிட்டாராய்ந்து
நாலாம்பதத்தினடந்தனையேநெஞ்சமே. (௨௦)

கடங்கடங்கடோறுங்கதிரவனூடாடி
யடங்குமிடந்தானறிந்தன்புற்றாய்நெஞ்சமே. (௨௧)

கற்றவனாய்க்கேட்டவனாய்க்காணானாய்க்காண்பவனாய்
உற்றவனாய்நின்றநிலையொன்றுபட்டாய்நெஞ்சமே. (௨௨)

நாலுவகைக்கரணநல்குபுலனைந்துமொன்றாய்ச்
சீலமுற்றுநின்றநிலைசேர்ந்தனையேநெஞ்சமே. (௨௩)

விட்டிடமுந்தொட்டிடமும்விண்ணிடமுமண்ணிடமுங்
கட்டுமொருதன்மையெனக்கண்ணுற்றாய்நெஞ்சமே. (௨௪)

எந்தெந்தநாளுமிருந்தபடியேயிருக்க
அந்தச்சுகாதீதமாகினையேநெஞ்சமே. (௨௫)

வாக்கிறந்துநின்றமனோகோசரந்தனிலே
தாக்கறவேநின்றநிலைதலைசெய்தாய்நெஞ்சமே. (௨௬)

எத்தேசமுநிறைந்தேயெக்காலமுஞ்சிறந்து
சித்தாயசித்தினிடஞ்சேர்ந்தனையேநெஞ்சமே. (௨௭)

தாழாதேநீனாதேதன்மயமதாய்நிறைந்து
வாழாதேவாழமருவினையேநெஞ்சமே. (உ

உள்ளும்புறம்புமுவட்டாதவானந்தக்
கள்ளருந்திநின்றநிலேகண்ணுற்றாய்நெஞ்சமே. (உ

வாதனைபோய்நிஷ்டையும்போய்மாமௌனராச்சியம்போய்
பேதமறநின்றவிடம்பெற்றனையேநெஞ்சமே. (ங

இரதம்பிரிந்துகலந்தேகமாம்வாறேபோல்
விரகந்தவிர்ந்தனல்பால்மேவினையேநெஞ்சமே. (ச

சோதியான்சூழ்பனிநீர்சூறைகொளுமாறேபோல்
நீதிகுருவின்றிருத்தாள்நீபெற்றாய்நெஞ்சமே. (ரு

நெஞ்சொடுமகிழ்தல் முற்றிற்று.

---

பட்டணத்துப்பிள்ளையார்

## உடற்கூற்றுவண்ணம்.

தன தன தான, தன தன தான, தந்த தனந்தன தந்த தனந்த
தனன தனந்த, தனன தனந்த, தானன தானன தான தனந்த.

ஒருமடமாதுமொருவனுமாகி, இன்பசுகந்தருமன்புபொருந்தி
யுணர்வுகலங்கியொழுகியவிந்து, ஊறுசுரோணிதமீதுகலந்து.

பனியிலோர்பாதிசிறுதுளிமாது, பண்டியில்வந்துபுகுந்து,
ண்டு, பதுமவரும்புகமடமிதென்று, பார்வைமெய்வாய்செவிக
ளெனவுளென்ற.

உருவமுமாகியுயிர்வளர்மாத, மொன்பதுமொன்றுநிறைந்துமட
யுதரமகன்றுபுவியில்விழுந்து, யோகமும்வாரமுநாளுமறிந்து.

மகளிர்கள்சேனைதாயணையாடை, மண்படவுந்தியுதைந்துகவிழ்ந்து
மடமயில்கொங்கையமுதமருந்தி, யோரறிவீரறிவாகிவளர்ந்து.

ஒளிநகையூறலிதழ்மடவாரு, வந்துமுகந்திடவந்துதவழ்ந்து
மடியிலிருந்துமழலைமொழிந்து, வாவிருபோவெனநாமம்விளம்ப.

உடைமணியாடையரைவடமாட,வுண்பவர்தின்பவர்தங்க ளொடுண்
டு, தெருவிலிருந்து புழுதியளைந்து, தேடியபாலரொடோடிநடந்து
அஞ்சுவயதாகிவிளையாடியே. (க)

உயர்தருஞானகுருவுபதேச, முத்தமிழின்கலையுங்கரைகண்டு
வளர்பிறையென்றுபலரும்விளம்ப,வாழ்பதினாறுபிராயமும்வந்து.

மயிர்முடிகோதியறுபதநீல, வண்டிமிர்தண்டொடைகொண்
டைபுனைந்து,மணிபொனிலங்குபணிகளணிந்து, மாகதர்போகதர்கூ
டிவணங்க.

மதனசொரூபனிவனெனமோக, மங்கையர்கண்டுமருண்டுதிர
ண்டு,வரிவிழிகொண்டுசுழியவெறிந்து, மாமயில்போலவர்போவது
கண்டு.

மனதுபொருமலவர்பிறகோடி, மங்கலசெங்கலசந்திகழ்கொங்கைம
ருவமயங்கியிதழமுதுண்டு, தேடியமாமுதல்சேரவழங்கி,

ஒருமுதலாகிமுதுபொருளாயி, ருந்ததனங்களும்வம்பிலிழந்து
மதனசுகந்தவிதனமிதென்று, வாலிபகோலமும்வேறுபிரிந்து.

வளமையுமாறியிளமையுமாறி, வன்பல்விழுந்திருகண்களிருண்டு
வயதுமுதிர்ந்துநரைதிரைவந்து, வாதவிரோதகுரோதமடைந்து.

செங்கையினிலோர்தடியுமாகியே. (உ)

வருவதுபோலவொருமூதுகூறு, மந்தியெனும்படிகுந்திநடந்து
மதியுமழிந்துசெவிதிமிர்வந்து, வாயறியாமல்விடாமன்மொழிந்து.

துயில்வருநேரமிருமல்பொருது, தொண்டையு நெஞ்சமுல
ந்துவறந்து, துகிலுமிழந்துசுணையுமழிந்து, தோகையர் பாலர்க
கோரணிகொண்டு.

கலியுகமீதிலிவர்மரியாதை, கண்டிடுமென்பவர்சஞ்சலமிஞ்ச
கலகலவென்றுமலசலம்வந்து, கால்வழிமேல்வழிசாரநடந்து.

தெளிவுமிராமலுரைதடுமாறி, சிந்தையுநெஞ்சுமுலைந்துமருண்டு
திடமுமுலைந்துமிகவுமலைந்து, தேறிநலாதரவேதெனநொந்து.

மறையவன்வேதனெழுதியவாறு, வந்ததுகண்டமுமென்றுதெளிந்
இனியெனகண்டமினியெனதொந்த, மேதினிவாழ்வுநிலாதினிநின்

கடன்முறைபேசுமெனவுரைநாவு, றங்கிவிழுந்துகைகொண்
மொழிந்து, கடைவழிகஞ்சியொழுகிடவந்து, பூதமுநாலுசுவாச
நின்று.

நெஞ்சுதடுமாறிவருநேரமே. (௪

வளர்பிறைபோலவெயிறுமுரோம, முஞ்சடையுஞ் சிறுகு
யும்விஞ்ச, மனதுமிருண்டவடிவுமிலங்க, மாமலைபோல் யமதூ
கள்வந்து.

வலைகொடுவீசியுயிர்கொடுபோக, மைந்தருர்வந்துகுனிந்தழநொ
மடியில்விழுந்துமனைவிபுலம்ப, மாழ்கினரெயிவர்காலமறிந்து.

பழையவர்காணுமெனுமயலார்கள், பஞ்சுபறந்திடநின்றவர்பந்
ரிடுமெனவந்துபறையிடமுந்த, வேபிணமேவுகவிசாரியுமென்று.

பலரையுமேவிமுதியவர்தாமி; ருந்துசவங்கழுவுஞ்சிலரென்று
பணிதுகில்தொங்கல்களபபணிந்து,பாவகமேசெய்துநாறுமுடம்பை.

வரிசைகெடாமலெடுமெனவோடி, வந்திளமைந்தர்குனிந்துசுமந்து
கடுகிநடந்துசுடலையடைந்து, மாறுடவாழ்வெனவாழ்வெனநொந்து.

விறகிடைமூடி யழல்கொடுபோட, வெந்துவிழுந்துமுறிந்துநிணங்க
ளுருகியெலும்புகருகியடங்கி, யோர்பிடிநீறுமிலாதவுடம்பை,

நம்புமடியேனையினியாளுமே. (௪)

உடற்கூற்றுவண்ணமுற்றிற்று.

---

பட்டினத்துப்பிள்ளையார்

அடங்கன்முறைமுற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

பட்டினத்துப்பிள்ளையார் திருவடிவாழ்க.

சர்வஞ்சின்மயம்.

---

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# பத்திரகிரியார்

# மெய்ஞ்ஞானப்புலம்பல்

முத்திதரும்வேதமொழிந்தபுலம்பல்சொல
அத்திமுகவன்றன்னருள்பெறுவதெக்காலம்.

ஆங்காரமுமடக்கி ஐம்புலனைச்சுட்டறுத்துத்
தூங்காமற்றூங்கிச் சுகம்பெறுவதெக்காலம்.

நீங்காச்சிவயோக நித்திரைகொண்டேயிருந்து
தேங்காக்கருணைவெள்ளந் தேக்குவதுமெக்காலம்.

தேங்காக்கருணைவெள்ளந் தேக்கியிருந்துண்பதற்கு
வாங்காமல்விட்டகுறை வந்தடுப்பதெக்காலம்.

ஓயாக்கவலையினா லுள்ளுடைந்துவாடாமல்
மாயாப்பிறவி மயக்கறுப்பதெக்காலம்.

மாயாப்பிறவி மயக்கத்தையூடறுத்துக்
காயாபுரிக்கோட்டை கைக்கொள்வதெக்காலம்.

காயாபுரிக்கோட்டை கைவசமாய்க்கொள்வதற்கு
மாயாவனுபூதி வந்தடுப்பதெக்காலம்.

சேயாய்ச்சமைந்து செவிடூமைபோற்றிரிந்து
பேய்போலிருந்து பிரமைகொள்வதெக்காலம்.

பேய்போற்றிரிந்து பிணம்போற்கிடந்துபெண்ணைத்
தாய்போனினைத்துத் தவமுடிப்பதெக்காலம். (௯)

கால்காட்டிக்கைகாட்டிக் கண்கள்முகங்காட்டி
மால்காட்டுமங்கையரை மறந்திருப்பதெக்காலம். (௰)

பெண்ணினல்லாராசைப் பிரமைதனைவிட்டொழிந்து
கண்ணிரண்டுமூடிக் கலந்திருப்பதெக்காலம். (௧௧)

வெட்டுண்டபுண்போல் விரிந்தவல்குற்பைதனிலே
தட்டுண்டுநிற்கை தவிர்வதுவுமெக்காலம். (௧௨)

ஆறாதபுண்ணி லழுந்திக்கிடவாமற்
றேறாதசிந்தைதனைத் தேற்றுவதுமெக்காலம். (௧௩)

தந்தைதாய்மக்கள் சகோதரரும்பொய்யெனவே
சிந்தைதனிற்கண்டு திருக்கறுப்பதெக்காலம். (௧௪)

மண்ணுயிரைக்கொன்று வதைத்துண்டுழலாமல்
தன்னுயிர்போலெண்ணித் தவமுடிப்பதெக்காலம். (௧௫)

பாவியென்றேபேர்படைத்துப் பாழ்நரகில்வீழாமல்
ஆவிநின்றருத்திரத்தை யறிவதினியெக்காலம். (௧௬)

உளியிட்டகல்லு முருப்பிடித்தசெஞ்சாந்தும்
புளியிட்டசெம்புபோற் பொருளாவதெக்காலம். (௧௭)

வேடிக்கையுஞ்சொகுசு மெய்ப்பகட்டும்பொய்ப்பகட்டும்
வாடிக்கையெல்லா மறந்திருப்பதெக்காலம். (௧௮)

பட்டுடையுமொப்பனையும் பாவனையுந்தீவினையும்
விட்டுவிட்டுன்பாதம் விரும்புவதுமெக்காலம். (௧௯)

ஆமைவருமாட்கண் டைந்தடக்கஞ்செய்தாற்போல்
ஊமையுருக்கொண் டொடுங்குவதுமெக்காலம். (உ0

கண்டிகையுஞ்சாவடியும் சாளிகையுமாளிகையுங்
கண்டுகளிக்குங் கருத்தொழிவதெக்காலம். (உ

அத்தனிருப்பிடத்தை யாராய்ந்துபார்த்துநிதஞ்
செத்தசவம்போற் றிரிவதினியெக்காலம். (உஉ

ஒழிந்தகருத்தினைவைத் துள்ளெலும்புவெள்ளெலும்பாய்க்
கழிந்தபிணம்போலிருந்து காண்பதினியெக்காலம். (உ

அற்பசுகமறந்தே யறிவையறிவாலறிந்து
கெற்பத்தில்வீழ்ந்துழலுங் கேடறுப்பதெக்காலம். (உ

கருப்படுத்தியென்னையமன் கைப்பிடித்துக்கொள்ளாமு
னுருப்படுத்தியாள வுடன்படுவதெக்காலம். (உ

தூண்டும்விளக்கணையத் தொடர்ந்திருள்முன்சூழ்ந்தாற்போல்
மாண்டுபிழைத்துவந்த வகைதெரிவதெக்காலம். (உ

தூரியின்மீன்போற் சுழன்றுமனம்வாடாமல்
ஆரியனைத்தேடி யடிபணிவதெக்காலம். (உ

எண்ணூறுகமிருந் தெய்தாதவீடுபெற
வெண்ணீறுபூசி விளங்குவதுமெக்காலம். (உ

அவவேடம்பூண்டிங் கலைந்துதிரியாமற்
சிவவேடம்பூண்டு சிறந்திருப்பதெக்காலம். (உ

அண்டருக்காநஞ்சருந்தி யம்பலத்திலாடுசிவன்
தொண்டருக்குத்தொண்டனெனத்தொண்டுசெய்வதெக்காலம். (ந

பன்றிவடிவெடுத்துப் பாரிழந்துமால்காணக்
குன்றில்விளக்கொளியைக் கூறுவதுமெக்காலம். (௩க)

இத்திக்குந்தெள்ளமிர்தைச் சித்தாந்தத்துட்பொருளை
முத்திக்குவித்தை முதனிலையைப்பதெக்காலம். (௩உ)

வேதாந்தவேதமெல்லாம் விட்டொழிந்தேநிஷ்டையிலே
ஏகாந்தமாக இருப்பதினியெக்காலம். (௩௩)

மற்றிடத்தைத்தேடியென்றன் வாழ்நாளைப்போக்காம
லுற்றிடத்தைத்தேடி யுறங்குவதுமெக்காலம். (௩௪)

இன்றுளோர்நாளை யிருப்பதுவும்பொய்யெனவே
மன்றுளோர்சொல்லும் வகையறிவதெக்காலம். (௩௫)

கஞ்சாவபினியுடன் கள்ளுண்டுவாடாமற்
பஞ்சாவமிர்தம் பருகுவதுமெக்காலம். (௩௬)

செஞ்சலத்திற்றிரண்ட சென்னம்மோட்சம்பெறவே
சஞ்சலத்தைவிட்டுன் சரணடைவதெக்காலம். (௩எ)

கும்பிக்கிரைதேடிக் கொடும்பாரிடந்தோறும்
சம்பித்திரிகை தடுப்பதினியெக்காலம். (௩அ)

ஆடுகின்றசூத்திரந்தா னறுமளவுமேதிரிந்து
போடுகின்றநாள்வருமுன் போற்றுவதுமெக்காலம். (௩௯)

நவசூத்திரம்போட்டு நானலநீயென்றிருந்த
சிவசூத்திரத்தைத் தெரிந்தறிவதெக்காலம். (௪0)

பரந்துமலசலங்கள் பாயும்புழுக்கூட்டைவிட்டு
கரந்தனடியிணைக்கீழ்க் கலந்துநிற்பதெக்காலம். (௪க)

இம்மைதனிற்பாதகனு யிருவினைக்கீடாயெடுத்த
பொய்ம்மைதனிற்போட்டென்னைப் போற்றிநிற்பதெக்காலம். (கூ௨

உப்பிட்டபாண்ட முடைந்துகருக்கொள்ளுமுன்னே
அப்பிட்டவேணியனுக் காட்படுவதெக்காலம். (கூ௩

சேவைபுரிந்து சிவரூபக்காட்சிகண்டு
பாவைதனைக்கழித்துப் பரமடைவதெக்காலம். (கூ௪

காண்டத்தைவாங்கிக் கருமேகமீண்டதுபோல்
பாண்டத்தைநீக்கிப் பரமடைவதெக்காலம். (கூ௫

சோற்றுத்துருத்திதனைச் சுமந்தலுத்துவாடாமல்
ஊத்தைச்சடம்போட் டுனையடைவதெக்காலம். (கூ௬

தொடக்கைச்சதமெனவே சுமந்தலைந்துவாடாமல்
உடக்கைக்கழற்றி யுனை யறிவதெக்காலம். (கூ௭

ஆசைவலைப்பாசத் தகப்பட்டுமாயாமல்
ஓசைமணித்தீபத்தி லொன்றிநிற்பதெக்காலம். (கூ௮

கூறரியநால்வேதங் கூப்பிட்டுங்காணாத
பாரமாம்ரகசியத்தைப் பார்த்திருப்பதெக்காலம். (கூ௯

புல்லாய்விலங்காய்ப் புழுவாய்நரவடிவா
யெல்லாப்பிறப்பி னிருளகல்வதெக்காலம். (௯௦

தக்கும்வகைக்கோர்பொருளும் சாராமலேநினைவில்
பக்குவம்வந்துன்னருளைப் பார்த்திருப்பதெக்காலம். (௯௧

புருஷத்தலைவரோடும் புல்கியின்பங்கொள்வதற்குத்
தெரிவைப்பருவம்வந்து சிக்குவதுமெக்காலம். (௯௨

தெரிவையரும்பக்குவத்தின் சீராட்டெல்லாமறிந்து
குருவையறிந்தேனினைத்துக் கும்பிடுவதெக்காலம். (௫௩)

வம்படிக்குமாதருடன் வாழ்ந்தாலுமன்னிபுளி
யம்பழமுமோடும்போ லாவதினியெக்காலம். (௫௪)

பற்றற்றுநீரிற் படர்ந்தவன்னம்பச்சிலைபோற்
சுற்றத்தைநீக்கிமனந் தூரநிற்பதெக்காலம். (௫௫)

சல்லாபலீலையிலே தன்மனைவிசெய்தசுகம்
சொல்லாரக்கண்டெனக்குச் சொல்வதினியெக்காலம். (௫௬)

மருவுமயற்புருடன் வருநேரங்காணாமல்
உருகுமனம்போலென்னு ளுருகுவதுமெக்காலம். (௫௭)

தன்கணவன்றன்சுகத்திற் றன்மனம்வேறானதுபோல்
என்கருத்திலுன்பதத்தை யேற்றுவதுமெக்காலம். (௫௮)

கூடிப்பிரிந்துவிட்ட கொம்பனையைக்காணாமற்
றேடித்தவிப்பவன்போற் சிந்தைவைப்பதெக்காலம். (௫௯)

எவனஸ்திரீமோக மெப்படியுண்டப்படிப்போற்
கவனத்திலுன்னைக் கலந்திருப்பதெக்காலம். (௬0)

கண்ணாலருவி கசிந்துமுத்துப்போலுதிரச்
சொன்னபரம்பொருளைத் தொகுத்தறிவதெக்காலம். (௬௧)

ஆகமிகவுருக வன்புருகவென்புருகப்
போகவநுபூதி பொருந்துவதுமெக்காலம். (௬௨)

நீரிற்குமிழிபோ னிசமற்றவாழ்வைவிட்டுன்
பேரிற்கருணைவெள்ளப் பெருக்கெடுப்பதெக்காலம். (௬௩)

அன்பையுருக்கி யறிவையதன்மேற்புகட்டித்
தன்னைவலைபாசத் தொடக்கறுப்பதெக்காலம். (கூச

கருவின்வழியறிந்து கருத்தைச்செலுத்தாமல்
அருவிவிழிசொரிய அன்புவைப்பதெக்காலம்.. (கூரு

தெளியத்தெளியத் தெளிந்தசிவானந்தத்தேன்
பொழியப்பொழியமனம் பூண்டிருப்பதெக்காலம். (கூசு

ஆதாரமூலத் தடியிற்கணபதியைப்
பாதாரவிந்தம் பணிந்திருப்பதெக்காலம். (கூஎ

மண்வளைந்தநாற்றிக்கில் வளைந்திருந்தவேதாவைக்
கண்வளைந்துபார்த்துள்ளே கண்டிருப்பதெக்காலம். (கூஅ

அப்புப்புறநடுவே யமர்ந்திருந்தவிஷ்ணுவை
உப்புக்குடுக்கையுள்ளே யுணர்ந்தறிவதெக்காலம். (கூகூ

மூன்றுவளையமிட்டு மூளத்தெழுந்தவெண்ணெருப்பில்
தோன்றுமுருத்திரனைத் தொழுதிருப்பதெக்காலம். (எ0

வாயுவறுகோணமதில் வாழுமகேச்சுரனைத்
தோயும்வகைகேட்கத் தொடங்குவதுமெக்காலம். (எக

வெட்டவெழிக்குள்ளே மேவுஞ்சதாசிவத்தை
கிட்டவரத்தேடக் கிருபைசெய்வதெக்காலம். (எஉ

உச்சிக்கிடைநடுவே யோங்குகுருபாதத்தை
நிச்சயித்துக்கொண்டிருக்க நேர்வதினியெக்காலம். (எ௩

பாராகிப்பார்மீதிற் பஞ்சவர்ணந்தானாகி
வேருருகிநீமூளத்த வித்தறிவதெக்காலம். (எச

கட்டறுக்கவொண்ணாக் கருவிகரணாதியெல்லாஞ்
சுட்டறுத்துவிஷ்தலையிலே தூங்குவதுமெக்காலம். (௭௫)

கள்ளக்கருத்தையெல்லாங் கட்டோடுவேரறுத்திங்
குள்ளக்கருத்தை யுணர்ந்திருப்பதெக்காலம். (௭௬)

அட்டகாசஞ்செய்து மவத்தைதச்சவத்துடனே
பட்டபாடத்தனையும் பகுத்தறிவதெக்காலம். (௭௭)

அறிவுக்கருவியுட னத்தைதடமெய்பாட்டையெல்லாம்
பிறிவுபடவிருத்திப் பெலப்பவதெக்காலம். (௭௮)

பூதம்பொறிகரணம் போந்தவிந்துநாதமுமாய்ப்
பேதம்பலவிதமும் பிரிந்தறிவதெக்காலம். (௭௯)

தோன்றாமைமூன்றுந் தொடர்ந்துவந்துசுற்றாமல்
ஊன்றாசைவேரையடி யூடறுப்பதெக்காலம். (௮0)

புன்சனனம்பொன்றுமுன்னே புரிவட்டம்போகினினி
யென்சனனமீடேறு மென்றறிவதெக்காலம். (௮௧)

நட்டநடுவெளிநின்று நற்றிரோதாயியருள்
இட்டவழிகாட்டிக் கிருபைசெய்வதெக்காலம். (௮௨)

நானேநானென்றறிந்தேன் நடுவெளிற்கட்டழி
தானேவெளிப்படுத்தித் தருவென்பதெக்காலம். (௮௩)

அடர்ந்தமனக்காட்டை யஞ்செழுத்தாம்வாளாலே
தொடர்ந்துதொடர்ந்துவெட்டிச் சுடுவதினியெக்காலம். (௮௪)

ஐந்துபொறிவழியோ யலைந்துயிர்ந்தபாழ்மனதை
வெந்துவிழப்பார்த்து விழிப்பதினியெக்காலம். (௮௫)

இனமாண்டுசேர்ந்திருந்தோ ரெல்லாருந்தாமாண்டு
சினமாண்டுபோகவருள் சேர்ந்திருப்பதெக்காலம். (அக)

அமையாமனதையு மானந்தவீடுகண்டால்
இமையாமனோக்கி யிருப்பதினியெக்காலம். (அஎ)

கூண்டுவிடும்சீவன்மெள்ளக் கொட்டாவிகொண்டாற்போல்
மாண்டுவிடுமுன்னநான் மாண்டிருப்பதெக்காலம். (அஅ)

ஊனிறைந்தகாய முயிரிறந்துபோகுமுன்னம்
நானிறந்துபோகவினி நாள்வருவதெக்காலம். (அகூ)

கெட்டுவிடுமாந்தர் கெறுவிதங்கள்பேசிவந்து
சுட்டுவிடுமுன்னென்னைச் சுட்டிருப்பதெக்காலம். (கூ0)

தோலேணிவைத்தேறித் தூரகடந்தெய்க்காமல்
நூலேணிவைத்தேறி நோக்குவதுமெக்காலம். (கூக)

வாயோடுகண்மூடி மயக்கமுற்றுநில்லாமல்
தாயோடுகண்மூடித் தழுவிநிற்பதெக்காலம். (கூஉ)

காசினியெலாநடந்து காலோய்ந்துபோகாமல்
வாசிதனிலேறி வருவதினியெக்காலம். (கூந)

ஒலிபடருங்குண்டலியை யுன்னியுணர்வாலெழுப்பிச்
சுழிமுனையின்மூழ்திறந்து தூண்டுவதுமெக்காலம். (கூச)

இடைபிங்கலைநடுவே யியங்குஞ்சுழிமுனையில்
தடையறவேநின்று சலிப்பறுவதெக்காலம். (கூரு)

மூலநெருப்பைவிட்டு மூட்டிநிலாமண்டபத்தில்
பாலையிறக்கி பசியொழிவதெக்காலம். (கூசு)

ஆகவெளிக்குள்ளே யடங்காப்புரவிசொல்ல
ஏகவெளியி லிருப்பதினியெக்காலம். (௯௭)

பஞ்சரித்துப்பேசும் பலகலைக்கெட்டாப்பொருளிற்
சஞ்சரித்துவாழுந் தவம்பெறுவதெக்காலம். (௯௮)

மலமுஞ்சலமுமற்று மாயையற்றுமானமற்று
நலமுங்குலமுமற்று நானிருப்பதெக்காலம். (௯௯)

ஓடாமலோடியுலைகவலம்சுற்றித்
தேடாமலென்னிடமாய்த் தெரிசிப்பதெக்காலம். (௱)

அஞ்ஞானம்விட்டே யருண்ஞானத்தொல்லைதொட்டு
மெய்ஞ்ஞானவீடுபெற்று வெளிப்படுவதெக்காலம். (௧௦௧)

வெல்லுமட்டும்பார்த்து வெருளியெலாம்விட்டகன்று
செல்லுமட்டுஞ்சிந்தை செலுத்துவதுமெக்காலம். (௧௦௨)

மேலாம்பதந்தேடி மெய்ப்பொருளையுள்ளிருத்தி
நாலாம்பதந்தேடி நான்பெறுவதெக்காலம். (௧௦௩)

எண்ணுதற்காரெல்லா மெண்ணியெண்ணிபாராமற்
கண்ணாடிக்குள்ளொளிபோற் கண்டறிவதெக்காலம். (௧௦௪)

என்னையறிந்துகொண்டே னெங்கோமானோடிருக்குந்
தன்மையறிந்து சமைந்திருப்பதெக்காலம். (௧௦௫)

ஆறுதாரங்கடந்த வானந்தப்பேரொளியைப்
பேறுகக்கண்டுகொள் பெற்றிருப்பதெக்காலம். (௧௦௬)

ஆணவமாயக்கா லறிந்துசலம்போகாமுன்
நாணிதலா லின்பமற்றுக் கண்டறிவதெக்காலம். (௧௦௭)

மும்மலமுஞ்சேர்ந்து மூளைத்தெழுந்தகாயமிதை
நிர்மலமாய்க்கண்டுவினை நீக்கிநிற்பதெக்காலம். (க0அ)

முன்னைவினைகெடவே மூன்றுவகைகாட்சியினால்
உன்னைவெளிப்படுத்தி யுறுவதினியெக்காலம். (க0க)

கண்ணினொளிபாய்ந்ததுவுங் கருத்தறிந்துகொண்டதுவும்
விண்ணினொளிகண்டதுவும் வெளிப்படுவதெக்காலம். (கக0)

கனவுகண்டாற்போலெனக்குக் காட்டிமறைந்தேயிருந்த
நினைவைப்பரவெளிமேல் நிறுத்துவதுமெக்காலம். (ககக)

ஆறென்றுகேட்டதுவு மறிவுவந்துகண்டதுவும்
பாரென்றுசொன்னதுவும் பகுத்தறிவதெக்காலம். (ககஉ)

நினைக்குநினைவுதோறும் நிறைந்தபரிபூரணத்தைத்
முனைக்குமேற்கண்டுகண்ணில் முத்தாயிருப்பதெக்காலம். (கக

முப்பாழும்பாழாய் முதற்பாழுஞ்சூனியமாம்
அப்பாழும்பாழா யன்புசெய்வதெக்காலம். (ககச

சீரென்றெழுந்து தெளிந்துநின்றவான்பொருளை
நீரென்றுகண்டு நிலைபெறுவதெக்காலம். (ககரு

அவ்வெழுத்தும்மவ்வெழுத்து மகழாருஞ்சிவ்வெழுத்தும்
யவ்வெழுத்தினுள்ளே யடங்கிநிற்பதெக்காலம். (ககசு

எழுத்தெல்லாமாண்டிறந்தே யேகமாநின்றநிலை
அழுத்தமாய்ச்சிந்தைதனையவைத் தன்புகொள்வதெக்காலம். (ககஎ

அருவாகியுருவாகி யாதியந்தமாகிநின்ற
குருவாகிவந்தெனையாட் கொண்டருள்வதெக்காலம். (ககஅ

நானென்றறிந்தவனை நானறியாக்காலமெல்லாந்
தானென்றுநீயிருந்த தனியறிவதெக்காலம். (ககக)

என்மயமாக்கண்டதெல்லா மெண்ணியெண்ணிப்பார்த்தபின்பு
தன்மயமாக்கொண்டதிலே சார்ந்துநிற்பதெக்காலம். (கஉ0)

ஒளியிலொளியா முருப்பிறந்தவாறதுபோல்
வெளியில்வெளியான விதமறிவதெக்காலம். (கஉக)

ஒளியிட்டமெய்ப்பொருளை யுள்வழியிலேயடைத்து
வெளியிட்டுச்சாத்திவைத்து வீடுறுவதெக்காலம். (கஉஉ)

காந்தம்வலித்திரும்பைக் கரத்திழுத்துக்கொண்டதுபோற்
பாய்ந்துபிடித்திழுத்துன் பக்கல்வைப்பதெக்காலம். (கஉங)

பித்தாயங்கொண்டு பிராணவத்தையூடறுத்துச்
செத்தாரைப்போலே திரிவதினியெக்காலம். (கஉச)

ஒழிந்தகருணைவைத் துள்ளொளும்புவெள்ளொளும்பாய்க்
கழிந்தபிணம்போலிருந்து காண்பதினியெக்காலம். (கஉரு)

ஆதிகபிலர்சொன்ன வாகமத்தின்சொற்படியே
சாதிவகையில்லாமற் சஞ்சரிப்பதெக்காலம். (கஉசா)

சூதுங்களவுந்தொடராவினையுஞ் சுட்டிடக்கற்
றூதுந்துருத்தியைப்போட் டுனையடைவதெக்காலம். (கஉஎ)

ஆசைவலைப்பாசத் தகப்பட்டுமாயாமல்
ஓசைமணிதீபத்தி லொன்றிநிற்பதெக்காலம். (கஉஅ)

கல்லாய்மரமாய்காயாய்ப் பறவைகளாய்ப்
புல்லாய்ப்பிறந்தசென்மம் போதுமென்பதெக்காலம். (கஉகூ)

தக்கும்வகைக்கோர்பொருளும் சாராமலேவிணைவிட்
பக்குவம்வந்துன்னருளைப் பார்த்திருப்பதெக்காலம். (கரு

தூரோடசைத்துச் சுழன்றுநின்றதத்துவத்தை
வேரோடறுத்து விளங்குவதுமெக்காலம். (கரு

பாகநடுமோறிப் பயந்தெழுந்தசிந்தைதனை
ஆகநடுமூலத் தழுத்துவதுமெக்காலம். (கரு

ஓரின்பங்கட்டு மூயர்ஞானவீதிசென்று
பேரின்பவீடுகண்டு பெற்றிருப்பதெக்காலம். (கரு

காரணமாய்வந்தென் கருத்திலுறைந்ததெல்லாம்
பூரணமாக்கண்டு புகழ்ந்திருப்பதெக்காலம். (கா

ஆயுங்கலைகளெல்லா மாராய்ந்துபார்த்ததற்பின்
நீயொன்றுமில்லா நிசங்காண்பதெக்காலம். (கரு

குறியாகக்கொண்டு குலமளித்தநாயகனைப்
பிரியாமற்சேர்ந்து பிறப்பறுப்பதெக்காலம். (கா

மத்தடுத்துநின்று மருளாடுவார்போலே
பித்தடுத்துநின்னருளைப் பெற்றிருப்பதெக்காலம். (க )

சாவாமற்செத்திருந்து சற்குருவின்பொன்னடிக்கீழ்
வேவாமல்வெந்திருக்க வேண்டுவதுமெக்காலம். (க )

என்னையறியாம லிருந்தாட்டுஞ்சூத்திரிநின்
தன்னையறிந்து தவம்பெறுவதெக்காலம். (க )

உள்ளறியாம லொளித்திருந்தநாயகனைக்
கள்ளமனந்தெளிந்து காண்பதினியெக்காலம். ( )

வாசித்துங்காணாமல் வாய்விட்டும்பேசாமல்
பூசித்துந்தோன்றாப் பொருள்காண்பதெக்காலம். (கசக)

பன்னிரண்டுகாற்புரவி பாய்ந்துசெலநடத்தாமற்
பின்னிரண்டுசங்கிலிக்குப் பிணைப்பதினியெக்காலம். (கசஉ)

நாட்டுக்காலிரண்டும்விட்டு நடுவுக்காலூடேபோய்
ஆட்டுக்காற்கண்டெனுள்ளே யமர்ந்திருப்பதெக்காலம். (கசங)

பாற்பசுவையூட்டி பதியில்வந்துசீராட்டி
காற்பசுவையோட்டியதிற் கட்டிவைப்பதெக்காலம். (கசச)

பலவிடத்தேமனதைப் பாயவிட்டுப்பாராமல்
நிலவரையினூடேபோய் நேர்படுவதெக்காலம். (கசரு)

காமக்கடல்கடந்து கரையேறிபோவதற்கே.
ஓமக்கனல்வளர்த்தி யுள்ளிருப்பதெக்காலம். (கசசு)

உதயச்சுடர்மூன்று முள்வீட்டிலேகொளுத்தி.
இதயத்திருநடன மினிக்காண்பதெக்காலம். (கசஎ)

பொன்னிற்பலவிதமாம் பூஷணமுண்டானதுபோல்
உன்னிற்பிறந்துன்னி லொடுக்குவதுமெக்காலம். (கசஅ)

நாயிற்கடைப்பிறப்பாய் நான்பிறந்துதான்பழுத.
வேயிற்கனலொளிபோல்விளங்குவதுமெக்காலம். (கசகூ)

சூரியகாந்தவொளி சூழ்ந்துபஞ்சைச்சுட்டாற்போ.
லாரியன்றோற்றத் தருள்பெறுவதெக்காலம். (கரு0)

இரும்பிற்கனன்மூட்டி யிவ்வுருப்போயவ்வுருவாய்க்
கரும்பிற்சுவைரசத்தைக் கண்டறிவதெக்காலம். (கருக)

கருக்கொண்டமுட்டைதனைக் கடலாமைதானினைக்க
உருக்கொண்டவாறதுபோ லுனையடைவதெக்காலம். (கருஉ

வீடுவிட்டுப்பாய்ந்து வெளியில்வருவார்போல்
கூடுவிட்டுப்பாயுங் குறிப்பறிவதெக்காலம். (கருங

கடைந்தவெண்ணெய்மோரிற் கலவாதவாறதுபோ
லுடைந்துதமியே னுனைக்காண்பதெக்காலம். (கருச

இருளையொளிவிழுங்கி யேகவுருக்கொண்டாற்போ
லருளைவிழுங்குமிரு ளகன்றுநிற்பதெக்காலம். (கருரு

மின்னெழும்மின்னொடுங்கி விண்ணிலுறைந்தாற்போ
லெண்ணிநின்றதென்னுள்ளே யானறிவதெக்காலம். (கருசு

கண்டபுனற்கடத்திற் கதிரொளிகள்பாய்ந்தாற்போல்
கொண்டசொரூபமதைக் கூர்ந்தறிவதெக்காலம். (கருஎ

பூணுகின்றபொன்னணிந்தாற் பொன்சுமக்குமோவுடலை
காணுகின்றவெனக்கூத்திற் கண்டறிவதெக்காலம். (கருஅ

செம்பிற்களிம்புபோற் சிவத்தைவிழுங்கிமிக
வெம்பிநின்றசெல்வத்தை வேறுசெய்வதெக்காலம். (கருகூ

ஆவியுங்காயமும்போ லாத்துமத்திநின்றதனைப்
பாவியறிந்துமனம் பற்றிநிற்பதெக்காலம். (கசுo

ஊமைகனாக்கண்டுரைக்க வறியாதவின்பமதை
நாமறிந்துகொள்வதற்கு நாள்வருவதெக்காலம். (கசுக

சாகாச்சிவனடியைத் தப்பாதாரெப்போதும்
போகாவுடலகன்று போவரென்பதெக்காலம். (கசுஉ

நிட்டைதனைவிட்டு நினையறிவுதப்பவிட்டு
வெட்டவெளியில் விரவிநிற்பதெக்காலம். (கசுங)

வெட்டவெளிதன்னில் விளைந்தவெறும்பாழைத்
திட்டமுடன்கண்டு தெளிவதினியெக்காலம். (கசுச)

எங்கும்பரைவடிவா யென்வடிவுநின்வடிவு
கங்குல்பகலின்றியுனைக் கண்டறிவதெக்காலம். (கசுரு)

உண்டதுவுமாத ருடன்கூடியச்சேர்ந்தின்பங்
கண்டதுநீயெனவே கண்டுகொள்வதெக்காலம். (கசுசு)

ஈமென்றுகேட்டதுவு மென்னுள்ளேநின்றதுவு
மோமென்றுசொன்னதுவு முற்றறிவதெக்காலம். (கசுஎ)

சத்தம்பிறந்திடமுந் தன்மயமாய்நின்றிடமுஞ்
சித்தம்பிறந்திடமும் தேர்ந்தறிவதெக்காலம். (கசுஅ)

போக்கும்வரவும் புறம்புமுள்ளுமாகிநின்று
தாக்கும்பொருளைச் சந்திப்பதெக்காலம். (கசுகூ)

நானெனவுநீயெனவு நாமிரண்டுமற்றொன்றாய்
நீயெனவேநின்று நிலைபெறுவதெக்காலம். (கஎ0)

அறிவையறிவாலறிந்தே யறியுமறிவுதனில்
பிறிவுபடநில்லாமல் பிடிப்பதினியெக்காலம். (கஎக)

நீடும்புவனமெல்லாம் நிறைந்துநின்றசித்திரமாய்
ஆடுந்திருக்கூத்தை யறிவதினியெக்காலம். (கஎஉ)

தித்தியென்றகூத்துந் திருச்சிலம்பினோசைகளும்
பத்தியுடன்கேட்டுப் பணிவதினியெக்காலம். (கஎங)

நயனத்திடைவெளிபோய் நண்ணும்பரவெளியில்
சயனித்திருந்து தலைப்படுவதெக்காலம். (க )

அருவிமலைநடுவே யாயிரங்கால்மண்டபத்தில்
திருவிளையாடற்கண்டு தெரிசிப்பதெக்காலம். (க )

மீனிரம்பவுண்டுகக்கி விக்கினின்றகொக்கதுபோ
றேனிறம்பவுண்டு தெவிட்டிநிற்பதெக்காலம். (க )

எண்ணூறு தவமிருந்து மெய்ஞானவீடுபெற
வெண்ணீறுபூசி விளங்குவதுமெக்காலம். (க )

பொல்லாதகாயமுனைப் போட்டுவிட்டுபோகுமுனே
கல்லாவின்பால்கறப்பக் கற்பதினியெக்காலம். (க )

வெட்டவெளிக்குள்ளே விளங்குஞ்சதாசிவத்தைத்
கிட்டவரத்தேடக் கிருபைசெய்வதெக்காலம். (க )

போறிவிலேமனதைப் போராமலேயிருத்தி
ஓரறிவிலென்னாளு மூன்றிநிற்பதெக்காலம். (க )

அத்துவிதம்போலுமென்ற வாத்துமத்திலுள்ளிருந்து
முத்திதரநின்ற முறையறிவதெக்காலம். (க )

நானின்றபாசமதி லானிருந்துமாளாமல்
நீநின்றகோலமதி னிரவிநிற்பதெக்காலம். (க )

எள்ளுங்கரும்பு மெழின்மலருங்காயமும்போல்
உள்ளும்புறம்புநின்ற துற்றறிவதெக்காலம். (க )

அன்னம்புலனைவருத் தமிர்தத்தையுண்டதுபோ
லென்னைவருத்தன்னை யினிக்காண்பதெக்காலம். (க )

அந்தரத்தினிற்பூத் தலர்ந்தெழுந்த தாமரைமேல்
சிந்தைதனைவைத்துக்கண்டு தெரிசிப்பதெக்காலம். (௧௮௫)

பிறப்பிறப்புமற்றுப் பேச்சுமற்று மூச்சுமற்று
மறப்புநினைப்புமற்று மாண்டிருப்பதெக்காலம். (௧௮௬)

என்வசமுங்கெட்டிங் கிருந்தவசமுமழிந்து
தன்வசமுங்கெட்டருளைச் சார்ந்திருப்பதெக்காலம். (௧௮௭)

தன்னைமறந்து தலைத்தாணிலைமறந்து
கன்மமறந்து கதிபெறுவதெக்காலம். (௧௮௮)

என்னையென்னிலேமறந்தே யிருந்தபதியுமறந்து
தன்னையுந்தானேமறந்து தனித்திருப்பதெக்காலம். (௧௮௯)

தன்னையுந்தானேமறந்து தலைவாசற்றாழ்போட்
டுன்னைநினைத்துள்ளே யுறங்குவதுமெக்காலம். (௧௯௦)

தொடக்கைச்சதமெனவே சுமந்தலைந்துவாடாம
லுடக்கைக்கழற்றி யுனையடைவதெக்காலம். (௧௯௧)

மன்றும்பரவெளியை மனவெளியிலடைத்தறிவே
என்றுமொருநினைவை யெழுப்பிநிற்பதெக்காலம். (௧௯௨)

எவனத்தின்மோக மெப்படியுண்டப்படியே
கவனத்தியானங் கருத்துள்வைப்பதெக்காலம். (௧௯௩)

ஆசைகொண்டமாத ரடைகனவுநீக்கியுன்மேல்
ஓசைகொண்டொறு மொடுங்குவதுமெக்காலம். (௧௯௪)

தன்னுயிரைக்கொண்டு தான்றிரிந்தவாறதுபோ
லுன்னுயிரைக்கொண்டிங் கொடுங்குவதுமெக்காலம். (௧௯௫)

சேற்றிற்சிறுநாட்டுந் திடமாமுடலையினிக்
காற்றிலுழல்சூத்திரமாக் காண்பதினியெக்காலம். (க

இணைபிரிந்தபோதலறி யின்றழுமன்றிலைப்போ
றிணைபிரிந்தபோதலறித் தொடர்ந்துகொள்வதெக்காலம். (க

ஆட்டமொன்றுமில்லாம லசைவற்றுங்காணுமல்
தேட்டமற்றவான்பொருளைத் தேடுவதுமெக்காலம். (க

கண்ணாலருவி கசிந்துமுத்துப்போலுதிர
எண்ணப்பரம்பொருளை யெண்ணுவதுமெக்காலம். (க

முன்னைவினையாலறிவு முற்றுமற்பின்மறைந்தா
லன்னைதனைத்தேடி யமுதுண்பதெக்காலம். (உ

கள்ளுண்டவர்போற் களிதருமானந்தத்தால்
தள்ளுண்டுநின்றாடித் தடைப்படுவதெக்காலம். (உ

தானென்றவாணவமுந் தத்துவமுங்கெட்டழிந்
தேனென்றபேச்சுமிலா திலங்குவதுமெக்காலம். (உ0

நானவனாய்க்காண்பதெல்லாம் ஞானவழியாலறிந்து
தானவனாய்நின்று சரணடைவதெக்காலம். (உ0

தானந்தமில்லாத தற்பரத்தினூடுருவி
ஆனந்தங்கண்டே யமர்ந்திருப்பதெக்காலம். (உ0

உற்றவெளிதன்னி லோய்விலாப்பாரந்தவிர்த்தே
மற்றமறவாழ்க்கை வாழ்வதினியெக்காலம். (உ0

எவ்வுயிர்க்குந்தானா யிருந்தபடியேயிருக்க
மையிருக்குநெஞ்ச மாள்வதினியெக்காலம். (உ0

ஏடலர்ந்தபங்கயமு மிருகணேநேத்திரமுந்
தோடணிந்தகுண்டலமுந் தோன்றுவதுமெக்காலம். (உ0எ)

ஐயாறுமாறு மகன்றுவெறுவெளியில்
மையாளில்நின்றமன மாள்வதினியெக்காலம். (உ0அ)

காட்டுமருண்ஞானக் கடலிலன்புகப்பல்விட்டு
மூட்டுகருணைக்கடலில் மூழ்குவதுமெக்காலம். (உ0க)

நாரோமீயாரோ நற்ரூபமான
தாரோரோவென்றுணர்ந்து தவமுடிப்பதெக்காலம். (உக0)

எவரெவர்களெப்படிக்கண் டெந்தப்படி நினைத்தார்
அவரவருக்கப்படிநின் றுமென்பதெக்காலம். (உகக)

உற்றுற்றுப்பார்க்க வொளிதருமானந்தமதை
நெற்றிக்குநேர்கண்டு நிலைப்பதினியெக்காலம். (உகஉ)

விளங்குகின்றதாரகையை வேய்யோன்மறைத்தாற்போல்
களங்காறவுன்காட்சி கண்டறிவதெக்காலம். (உகங)

என்னையேயறியே னிந்தவண்ணஞ்சொன்னதெல்லாம்
முன்னையோர்நகைகொள்ள முன்பணிவதெக்காலம். (உகச)

அஞ்சுகரத்தா னடியிணையைப்போற்றிசெய்து
நெஞ்சுபொருந்தி நிலைபெறுவதெக்காலம். (உகரு)

பத்திரகிரியார்மெய்ஞ்ஞானப்புலம்பல்.

முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

பத்திரகிரியார் திருவடிவாழ்க.

சர்வஞ்சின்மயம்.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# சிவவாக்கியம்.

அகாரகாரணத்துளே யனேகனேகரூபமாய்
உகாரகாரணத்துளே யுருத்தரித்துநின்றனன்
மகாரகாரணத்துளே மயங்கினின்றவையகஞ்
சிகாரகாரணத்துளே தெளிந்ததேசிவாயமே.

அரியதோர்நமசிவாய மாதியந்தமானதும்
ஆறிரண்டுநூறுகோடி யளவிடாதமந்திரம்
தெரியநாலுவேதமாறு சாஸ்திரம்புராணமுந்
தேடுமாலுமயனுஞ்சர்வ தேவதேவதேவனே.

நமசிவாயமைந்தெழுத்து நிற்குநன்னிலைகளும்
நமசிவாயமைந்திரண்டு கூடுமவ்வெழுத்தையும்
நமசிவாயமைந்துபூத நாதமானவாறையும்
நமசிவாயவுண்மையை நமக்குரைசெய்நாதனே.

நவ்விரண்டுகாலதாய் நவின்றமவ்வுவயிறதாய்ச்
சிவ்விரண்டுதோளதாய்ச் சிறந்தவவ்வுவாயதா
யவ்விரண்டுகண்ணதா யமர்ந்திருந்தகாரணஞ்
செவ்வியொத்துநின்றதே சிவாயமைந்தெழுத்துமே.

சிவாயமைந்தெழுத்திலே தெளிந்துமுத்திசேரலாம்
சிவாயமைந்தெழுத்திலே தெளிந்துவானமாளலாம்
சிவாயமைந்தெழுத்திலே தெளிந்துஞானம்சேரலாம்
சிவாயமைந்தெழுத்தையுந் தெளிந்துபாருமும்முளே.

பரமுனக்கெனக்குவேறு பயமுமில்லைபாரையா
கரமுனக்குவித்தமுங் குவித்திடக்கடவையை
சிரமுருக்கியமுதளித்த சீருலாவுநாதனே
யுரமெனக்குநீயளித்த வுண்மையுண்மையுண்மையே. (௬)

அஞ்சுமூன்றுமெட்டதா யநாதியானமந்திரம்
நெஞ்சிலேநினைந்துகொண்டு நூறுநூறுசெபிப்பிரேற்
பஞ்சமானபாதகங்க ளூறுகோடிசெய்யினும்
பஞ்சுபோற்பறக்குமென்று நான்மறைகள்பன்னுமே. (௭)

சிவாயவென்றவட்சரஞ் சிவனிருக்குமட்சரம்
உபாயமென்றுநம்புவோர்க் குண்மையானவட்சரம்
கபாடமிட்டவாசலைக் கடந்துபோகும்வாயுவை
யுபாயமிட்டழைக்குமே சிவாயமைந்தெழுத்துமே. (௮)

நல்லமஞ்சனங்கள்தேடி நாடியோடிமாய்கிறீர்
நல்லமஞ்சனங்களுண்டு நாட்டமாகவும்முளே
யெல்லைகண்டெடுத்துநீவி ரேகபூசைசெய்விரேற்
றில்லைமேவுசீவனுஞ் சிவன்பதத்திலாகுமே. (௯)

அறிவிலேபிறந்திருந்து மாகமங்களோதுவீர்
* நெறியிலேநிருக்கு நேர்மையென்னநேர்மைகா
ணுறியிலேதயிரிருக்க வூர்புகுந்துவெண்ணெய்தே
டறிவிலாமாந்தரோடு மணுகிவாழ்வதெங்ஙனே. (௰)

இருக்குநாலுவேதமு மெழுத்தறவேயோதினும்
பெருக்கநீறுபூசினும் பிதற்றினும்பிரானிரா
னுருக்கிநெஞ்சையுட்கலந்த வுண்மைகூடவல்லிரேற்
சுருக்கமற்றசோதியைத் தொடர்ந்துகூடலாகுமே. (௧௧)

---

* நெறியதனில்நீரிருக்க என்றும்பாடம்.

மூலவட்டமீதிலே முளைத்தவைந்தெழுத்திலே
கோலவட்டமூன்றுமாய்க் குளிர்ந்தலர்ந்துநின்றதீ
ஞாலவட்டமன்றுளே நவின்றஞானிமேலதா
யேலவட்டமாகியே யிருந்ததேசிவாயமே. ௩௨)

அம்பலத்தையம்புகொண்டசங்கென்றாலசங்குமோ
கம்பமற்றபாற்கடல் கலங்கென்றாற்கலங்குமோ
வின்பமற்றயோகியை யிருளுவந்தணுகுமோ
செம்பொனம்பலத்திலே தெளிந்ததேசிவாயமே. ௩௩)

கானமுற்றகாட்டகத்தில் வெந்தெழுந்தநீறுபோல்
ஞானமுற்றநெஞ்சகத்தி னல்லதொன்றுமில்லையே
யூனமற்றசோதியோ டுணர்வுகொண்டடங்கினுற்
றேனகத்தினூறல்போற் றெளிந்ததேசிவாயமே. ௩௪)

மனத்தகத்தழுக்கறாத மௌனயோகஞானிகள்
வனத்தகத்திருக்கினு மனத்தகத்தழுக்கறார்
மனத்தகத்தழுக்கறுத்த மௌனயோகஞானிகள்
முளைத்தடத்திருக்கினும் பிறப்பறுத்திருப்பரே. ௩௫)

பேசுவானுமீசனே பிரமஞானமும்முளே
யாசையானவைவரு மலைந்தலைச்சற்படுகிறா
ராசையானவைவரை யடக்கியோரிடத்திலே
பேசிடாதிருப்பிராகி லீசன்வந்துபேசுமே. ௩௬)

சாமநாலுவேதமுஞ் சகலசாஸ்திரங்களுஞ்
சேமநூலையோதினுஞ் சிவனைநீரறிந்திலீர்
காமநோயைவிட்டுநீர் கருத்தொடுங்கவல்லிரே
லூனமற்றகாயமா யிருப்பனெங்களீசனே. ௩௭)

வரவுகண்டுகொண்டபெண்ணை மற்றொருவர்நத்தினால்
விடுவரொன்பராருயிரை வெட்டவேண்டுமென்பரே
நடுவன்வந்தழைத்தபோது நாறுமிந்தநல்லுடல்
சுடலைமட்டுங்கொண்டுபோய்த் தோட்டிகைக்கொடுப்பரே. (௧௮)

இரண்டதொன்றுமூலமா யியங்குசக்கரத்துளே
சுருண்டுமூலவளையமாய்ச் சுணங்குபோற்கிடந்ததில்
முரண்டெழுந்தசங்கினோசை மூலநாடியூடுபோ
யரங்கபட்டணத்துளே யமர்ந்ததேசிவாயமே. (௧௯)

வித்திலாதசம்பிரதாய மேலுமில்லைகீழுமில்லை
தைத்திலாதமாளிகை சமைந்தவாறதெங்ஙனே
பெற்றதாயைவிற்றடிமை கொள்ளுகின்றபேதைகாள்
சித்திலாதபோதுதான் சீவனில்லையில்லையே. (௨௦)

ஆடுகாட்டிவேங்கையை யகப்படுத்துமாறுபோல்
மாடுகாட்டியென்னைநீ மதிமயக்கலாகுமோ
கோடுகாட்டுமானையைக் கொன்றுரித்தகொற்றவா
வீடுகாட்டியென்னைநீ வெளிப்படுத்தவேண்டுமே. (௨௧)

உருத்தரித்தநாடிதன்னி லோடுகின்றவாயுவை
கருத்தினாலிருத்தியே கபாலமேற்றவல்லிரேல்
விருத்தர்களும்பாலராவர் மேனியுஞ்சிவந்திடும்
அருட்டரித்தநாதனாணை யம்மையாணையுண்மையே. (௨௨)

என்னகத்திலென்னைநா னெங்குமோடிநாடினே
னென்னகத்திலென்னையன்றி யேதுமொன்றுங்கண்டிலேன்
மின்னெழும்பிமின்னகத்தின் மின்னொடுங்குமாறுபோ
லென்னகத்துளீசனோடி யானுமல்லதில்லையே. (௨௩)

நாலுவேதமோதுகின்றஞானமொன்றறிவிரோ
நாலுசாமமாகியே நவின்றஞானம் போதமாய்
ஆலமுண்டகண்டனு மயனுமந்தமாலுமாய்ச்
சாலவுன்னிநெஞ்சுளே தரித்ததேசிவாயமே. ௪)

மூச்சதுரமூலமாகி மூன்றதானபேதமா
யச்சதுரமும்முளே யடங்கவாசியோகமாய்
மெய்ச்சதுரமெய்யுளே விளங்குஞானதீபமா
யுச்சரித்தமந்திரம் ஓம்நமசிவாயமே. ௫)

மூலமண்டலத்துளே முச்சதுரமாகியாய்
நாலுவாசலெண்விரலி னடுவுதித்தமந்திரங்
கோலியொன்றுமைந்துமாய்க் குளிர்ந்தலர்ந்துநின்றதை
மேலுவேறுநாடிலேன் விளைந்ததேசிவாயமே. ௬)

மூன்றுமண்டலத்துளே முட்டிநின்றதூணிலே
நான்றபாம்பின்வாயிலே நவின்றெழுந்ததீபமா
யீன்றதாயுமப்பனு மெடுத்துரைத்தமந்திரந்
தோன்றுமோரெழுத்திலே செல்லவெங்குமில்லையே. ௭)

ஐம்பதொன்றிலக்கர மடங்குமோரெழுத்துளே
விண்பரந்தமந்த்ரமும் வேதநான்குமொன்றலோ
ஒண்பரந்தமூலமைந் தெழுத்துளேமுளைத்தெழுந்
தங்கலிங்கபீடமா யமர்ந்ததேசிவாயமே. ௮)

வஞ்சகப்பிறப்பினை மனத்துளேதரித்துநீ
ரஞ்செழுத்திலுண்மையை யறிகிலாதமாந்தரே
வஞ்சனைப்பிறப்பினை வதைத்திடவும்வல்லிரே
லஞ்செழுத்திலுண்மையை யறிந்துகொள்ளலாகுமே. ௯)

இடங்கள்பண்ணிச்சுத்திசெய்து மிட்டபீடமீதிலே
யடங்கநீறுபூசியே யருந்தவங்கள்பண்ணுவீர்
ஒடுங்குகின்றநாதனை யுதிக்குஞானமெய்விட
மடங்குகின்றதெவ்விட மறிந்துபூசைசெய்யுமே. (௩0)

அட்சரமதாதியோ வாத்துமமதாதியோ
தத்துவமதாதியோ சதாசிவமதாதியோ
தக்கமிக்கநூல்களுஞ் சாஸ்திரமதாதியோ
மிக்கிருந்தஞானிகள் விரித்துரைத்தல்வேண்டுமே. (௩௧)

அக்கரமதாதியல்ல வாத்துமமதாதியல்ல
புக்கிருந்தபூதமும் புலன்களுமதாதியல்ல
தக்கமிக்கநூல்களுஞ் சாஸ்திரமதாதியல்ல
ஒக்கநின்றுடற்கலந்த வுண்மைகாணதாதியே. (௩௨)

புத்தகங்களைச்சுமந்து பொய்களைப்பிதற்றுவீர்
செத்திடம்பிறந்திடம் தெங்கனென்றறிகிலீர்
அத்தனையறிந்துமே யறிந்துநோக்கவல்லீரேல்
உத்தமத்தனாயசோதி யுணருமுயோகமாகுமே. (௩௩)

நாலுவேதமோதுவீர் ஞானமொன்றுசொல்லுவீர்
பாலிலேறுநெய்கலந்த பான்மையையறிவீரோ
வாலமுண்டகண்டனு மகத்துளேயிருக்கையிற்
காலனென்றுசொல்லுவீர் கனவிலுமங்கில்லையே. (௩௪)

சாதியாவதேதடா சலந்திரண்டநீரலோ
பூதவாசமொன்றலோ பூதமைந்துமொன்றலோ
ஓதும்வேதநீருமு மூனுறக்கமொன்றலோ
சாதியாவதென்பதேது காவுவாழ்வுதின்னமே. (௩௫)

அருளிலேபிறந்துஇத்து மானரூபமாகியே
விருளிலேதயங்குகின்ற வேழைமாந்தர்கேண்மினோ
பொருளிலேதவம்புனைந்து பொருந்தநோக்கவல்லிரேல்
மருளதேதுவன்னியின் மறைந்ததேசிவாயமே. ( )

கருக்கலந்தகாலமே கண்டிருந்தகாரணா
வுருக்கலந்தபோதலோ வுன்னையானறிந்தனன்
திருக்கலந்தசோதியைத் தெளிந்துயானறிந்தபின்
னிருக்கிலேனிறக்கிலே னிரண்டுமற்றிருந்ததே. ( )

மௌனமானவைந்தெழுத்தை வாசியேறிமெல்லவே
வானெலாநிறைந்தசோதி மண்டலம்புகுந்தபின்
அவனுநானுமெய்கலந்தே யனுபவிக்குமளவிலே
யவனுமுண்டுநானுமில்லை யாருமில்லையானதே. (ந

கைவிடங்கள்கொண்டுநீர் கண்சிமிட்டிநிற்கிறீர்
செய்விடங்கள்கொண்டுநீ ரென்றுமேசெபிக்கிறீர்
பொய்யடங்கவையரைப் பொருந்திநோக்கவல்லிரேல்
மையமர்ந்தகண்டனோடும் மருவிவாழலாகுமே. (ரு

பருத்திநூன்முருக்கியிட்டுப் பஞ்சையோதுவஞ்சர்காள்
அருத்திநூன்முறுக்கியிட்டுத் தூண்டியேறவல்லிரேற்
கருத்தினோலையுங்கழன்று காலனோலையும்மகன்
றெருத்திநூல்தலைப்படுமி துண்மையுண்மையுண்மையே. (சு

தன்மசிந்தையாமளவுந் தவமறியாத்தன்மையாய்
கன்மசிந்தைவெயிலுழன்று கருத்தழிந்தகசடரே
ஜென்மஜென்மந்தேடியுந் தெளியொணாதசெல்வனை
நன்மையாகவும்முளே நயந்துகாணவேண்டுமே. (ரு

வானிலாததொன்றுமில்லை வானுமில்லையென்றிடில்
ஊனிலாததொன்றுமில்லை யூனுமில்லையுன்னிடில்
நானிலாததொன்றுமில்லை நானுமில்லைநண்ணிடில்
தானிலாததொன்றுமில்லை தயங்கியாடுகின்றதே. (௬௨)

கள்ளமுள்ளமேயிருக்கக் கடந்தஞானமோதுவீர்
கள்ளமுள்ளமறுத்தபோது கதியிதன்றிக்காண்கிலீ
ருள்ளமேவிளக்கிவித்த மொளியணுகவல்லிரேற்
றெள்ளுஞானமும்முளே சிறந்ததேசிவாயமே. (௬௩)

காணவேண்டுமென்றுநீர் கடன்மலைகளேறுவீர்
ஆணவமதல்லவோ வறிவிலாதமாந்தரே
வேணுமென்றவ்வீசர்பாத மெய்யுளேதரிப்பிரேற்
றாணுவாகநின்றசீவன் றான்சிவமதாகுமே. (௬௪)

அணுவிசேடகண்டமா யளவிடாதசோதியைக்
குணமதாகவும்முளே குறித்துநோக்கின்முத்தியாம்
மிணமுமொன்றுவிரலையெண்ணி மீளொணுமயக்கமாய்த்
துணிவிலாதபடியிருற் றொடர்ந்துபூசைசெய்குவீர். (௬௫)

எச்சிலெச்சிலென்றுநீரிடர்ந்திருக்குமேழைகாள்
துச்சிலெச்சிலல்லவோ தூயகாயமானதும்
வைத்தவெச்சிறேனலோ வண்டிநெச்சில்பூவலோ
கைச்சதாவில்வைத்துடன் கறந்தபாலுமெச்சிலே. (௬௬)

தீர்த்தலிங்கமூர்த்தியென்று தேடியோடுந்தீதரே
தீர்த்தலிங்கமுள்ளினின்ற சிவனைத்தெளியுமோ
தீர்த்தலிங்கமும்முளேதெளிந்துகாணவல்லிரேற்
றீர்த்தலிங்கந்தானதாய்ச் சிறந்ததேசிவாயமே. (௬௭)

ஆடுகொண்டுகூடுசெய் தமர்ந்திருக்கும்வாறுபோற்
றேடுகின்றசெம்பினைத் திடப்படப்பரப்பியே
நாடுகின்றதம்பிரானு நம்முளேயிருக்கவே
போடுபத்ரபூசையென்ன பூசையென்னபூசையே. (சஅ

அன்னைகற்பகோளரைக்கு ளக்கினிப்பிரகாசமா
வவ்வரைக்குள்வெந்திடா வற்பவிந்துரூபமாய்
தன்னையொக்குமென்றபோது தடையறுத்துவெளியதாய்த்
தருதிநல்லபெருமைதந்து தலைவனுகவளர்ந்ததே. (சகூ

என்னையற்பநேரமு மறக்கிலாதநாதனே
யேகனேயிறைவனே யிராசராசராசனே
யுன்னையற்பநேரமு மொழிந்திருக்கலாகுமோ
வுனதுநாட்டமெனதுநாவி லுதவிசெய்விசனே. (ரு

எல்லையற்றுநின்றசோதி யேகமாயெறிக்கவே
எந்தைபூரணப்பிரகாச ரேகபோகமாகியே
நல்லவின்பமௌனசா கரத்திலேயழுத்தியே
நாடொறுதவமிர்தமுண்டு நானழிந்துநின்றநாள். (ரு

அல்லிறந்துபகலிறந் ததிதமுமிறந்துபோ
யண்டரண்டமுங்கடந் தநேகநேகரூபமாய்ச்
சொல்லிறந்துபொருளிறந்த சுகசொரூபவெளியிலே
சொல்லியாரவெண்ணில்வேறு துணைகளானவில்லையே. (ரு

ஆனவாறதாயிடு மகண்டமானசோதியை
யூனைநாட்டியும்முளே யுகந்துகாணவல்லிரே
லூனகாயமாளலா முலகபாரமாளலாம்
வானநாடுமாளலாம் வானநாடராணையே. (ரு

இட்டகுண்டமேதடா வெரிவளர்ப்ப*தேதடா
சுட்டமண்கலத்திலே சுற்றுநூல்களேதடா
முட்டிநின்றதூணிலே முளைத்தெழுந்தசோதியைப்
பற்றிநின்றதேதடா பட்டநாதபட்டரே. (ருச)

நித்தலுமணிதுலக்கி நீடுமூலைபுக்கிருந்து
கத்தியேகதறியே கண்கண்மூடியென்பயன்
எத்தனைபேரெண்ணினு மெட்டிரண்டுபத்தலோ
வத்தனுக்கேற்குமோ வறிவிலாதமாந்தரே. (ருரு)

பாங்கிறேறுபத்மவா சனத்திருந்துபார்த்தனன்
றூங்கிநாடிமேலிருந்தே யுச்சரிக்குமந்திரம்
மூங்கில்வெட்டிநாருரித்து மூச்சையோட்டியுண்டநா
றையந்துநூலிதொன்றுமே யறிந்துணர்ந்துகொண்மினே. (ருசு)

அருக்கனோடுசோமனு மதற்குமப்புறத்திலும்
நெறுக்கியேறுதாரகை நெருங்குமோரகத்திலே
பாப்பிலாவெளியிலே பாத்தைநாடியூடுபோ
யிருக்கவல்லவர்க்கலோ வினிப்பிறப்பதில்லையே. (ருஎ)

ஆவதும்பரத்துளே யழிவதும்பரத்துளே
போவதும்பரத்துளே புகுவதும்பரத்துளே
தேவரும்பரத்துளே திசைகளும்பரத்துளே
யாவரும்பரத்துளே யியானுமப்பரத்துளே. (ருஅ)

எட்டிரண்டுகூடியே யிலிங்கமானதேவனை
மட்டதாகவும்முளே மதித்துநோக்கவல்லிரேற்
கட்டமானபிறவியின் கருக்கடல்கடக்கலா
மிட்டமானவெளியிறே டிசைந்திருப்பீர்காண்மினே. (ருகூ)

---

* எதடா தோன்றுன்னிலைப்பெயர்.

உண்மையானமந்திர மொளியிலேயிருந்திடுந்
தண்மையானமந்திரஞ் சமைந்தரூபமாகியே
வெண்மையானமந்திரம் விளைந்துநீறதானதே
யுண்மையானமந்திரம தொன்றுமேசிவாயமே. (சுO

பன்னிரண்டுகால்நிறுத்திப் பஞ்சவன்னமொத்திட
மின்னியவ்வெளிக்குணின்று வேறெடுத்தமர்ந்தது
சென்னியாந்தலத்திலே சீவனின்றியங்கிடும்
பன்னியுன்னியாய்ந்தவர் பரப்பிரமமாவரே. (சுக

அச்சுவாயிலுச்சிமே லாயிரத்தலங்களாய்
முச்சுடருமூவிரண்டு மூண்டெழுந்ததீச்சுடர்
வச்சிரமதாகியே வளர்ந்துநின்றதெவ்விடம்
இச்சுடருமிந்திரியமு மேகமானதெங்கனே. (சுஉ

எளிதினங்குகாணலாகு மெம்பிரானிருப்பிடம்
அழிவிலாதுநின்றதே யகாரமுமுகாரமும்
குளிகையானசோதியுங் குலாவிநின்றதவ்விடம்
வெளியதாகுமொன்றிலே விளைந்ததேசிவாயமே. (சுங

ஆதியந்தமூலவிந்து நாதமைந்தெழுத்துமாய்
ஆதியந்தமூலவிந்து நாதமைந்துபூதமாய்
ஆதியந்தமூலவிந்து நாதமேவிநின்றதே
ஆதியந்தமூலவிந்து நாதமேசிவாயமே. (சுச

மூன்றிரண்டுமைந்துமாய் முயன்றெழுந்ததேவராய்
மூன்றிரண்டுமைந்ததாய் முயன்றதேயுலகெலா
மீன்றதாயுமப்பனு மியங்குகின்றநாதமும்
தோன்றுமோரெழுத்திலே சொல்லவேறுமில்லையே. (சுரு

அக்கரந்தவக்கரத்தி னுட்கரந்தவக்கரஞ்
சக்கரந்துசவ்வையுண்டு சம்பளத்திருந்ததீ
வெட்கரந்தவெண்ணெய்போல வெவ்வெழுத்துமெம்பிரா
னுட்கரந்துநின்றநேர்மை யாவர்காணவல்லிரே. (௬௬)

நெட்டெழுத்தின்வட்டமே நிறைந்தபல்லியோனியும்
நெட்டெழுத்தின்வட்டமன்றி நின்றதொன்றுங்கண்டிலே
நெட்டெழுத்திரண்டுமே யிலங்குமாகுமாதலால்
நெட்டெழுத்தின்வட்டமன்றி நேர்படாதவீசனே. (௬௭)

அரியுமாகியயனுமாகி யண்டமெண்டிசையுமாய்ப்
பெரியனாகியுலகினிற் பெயர்ந்தபாதமொன்றலோ
வுருவுகண்டுவேறுசெய்து வேடமிட்டமூடரே
யுருவின்மூன்றுதேவர்களு மொன்றதாகுமும்முளே. (௬௮)

முத்திசித்திதொந்தமாய் முயங்குகின்றமூர்த்தியை
மற்றுதித்தவைம்புலன்க ளாகுமத்திமப்புலன்
அத்தர்சித்தர்காளகண்ட ரன்பிலுள்ளுதின
முச்சரித்துளத்திலே யறிந்துணர்ந்துகொண்மினே. (௬௯)

சுக்கிலத்துளியுளே சுரோணிதக்கருவுளே
முச்சதுரவாசலின் முளைத்தெழுந்தமோட்டினின்
மெச்சதுரமெய்யுளே விளங்குஞானதீபமா
யுச்சரித்தமந்திரம தொன்றுமேசிவாயமே. (௭௦)

வேணுமென்றஞானமும் விரும்புகின்றநூலிலே
தாணுவுண்டங்கென்கிறீர் தரிக்கிலீர்மறக்கிறீர்
தாணுவென்றமூலநாடி தன்னைநாடியும்முளே
காணுமன்றிவேறியாவுங் கண்மயக்கமொக்குமே. (௭௧)

வழக்கிலேயுரைக்கிறீர் மனத்துளேதவிக்கிறீர்
உழக்கிலாதுநாழியான வாறுபோலுமூமைகாள்
உழக்குநாலுநாழியான வாறுமோலுமும்முளே
வழக்கிலேயுரைக்கிறீர் மனத்துளீசன்மன்னுமே. (எஉ)

உதித்தெழுந்ததெவ்விட மொடுங்குகின்றதெவ்விடம்
மதித்தஞானமெவ்விட மயங்குகின்றதெவ்விடங்
கதித்தசிவனெவ்விடங் கண்ணுறக்கமெவ்விடம்
விதிக்கவல்லஞானிகாள் விரித்துரைக்கவேண்டுமே. (எங)

அண்ணலாரநாதியா யநாதிமுன்னநாதியாய்ப்
பெண்ணுமாணுமொன்றலோ பிறப்பதாகுமுன்னெலாங்
கண்ணிலாணிசுக்கிலங் கருத்தொடுங்கிநின்றபின்
மண்ணுளோரும்விண்ணுளோரும் வந்தவாறதெங்ஙனே. (எச)

நினைப்பதொன்றுங்கண்டிலே னீயலாதுவேறிலை
நினைப்புமாய்மறப்புமாகி நின்றமாயைமாய்கையே
யனைத்துமாயகண்டமா யநாதிமுன்னநாதியே
முனக்குநானெனக்குநீ நினைக்குமவாறதெங்ஙனே. (எரு)

* அனுப்பிறந்தகண்டமா யகன்றவன்னியோனியாய்
மனுப்பிறந்துசெய்துவைத்த நூலினுண்மயக்குவீர்
சனிப்பதேதுசாவதேது தாவரத்தினுட்பொரு
ணினைப்பதேதுநிற்பதேது நீருணர்ந்துகூறுமே. (எசா)

எத்திசைக்குமெவ்வுயிர்க்கு மெங்களப்பனெம்பிரான்
முத்திஞானவித்துளே முளைத்தெழுந்தசெஞ்சுடர்
சித்தினிற்றெளிந்தபோது தேவர்கோயிற்சேர்ந்தன
னத்தனுடல்கண்டபோ தடங்கியாடலுற்றதே. (எஎ)

* அணு- என்றும் பாடம்.

அங்கலிங்கபீடமும் மவைங்கண்மூன்றெழுத்தினுஞ்
சங்குசக்கரத்தினுந் தரித்தவெண்கரத்தினும்
பங்குகொண்டசோதியும் பரந்தவாயுவைந்தினுஞ்
சிங்கநாதவீணையுஞ் சிவாயமல்லதில்லையே. (எஅ)

நீளவீடுகட்டுவீர் நெடுங்கதவுசாத்துவீர்
வாழவேணுமென்றலோ மகிழ்ந்திருந்தமாந்தரே
காலனோலைவந்தபோது கைகலந்துநின்றிடும்
ஆலமுண்டகண்டராணை யம்மையாணையுண்மையே. (எகூ)

வீடெடுத்துவேள்விசெய்து மெய்யினோடுபொய்யுமாய்
மாடமக்கள்பெண்டிர்சுற்ற மென்றிருந்தமாந்தர்கா
ளோடுபெற்றநம்பர்கையி லோலைவந்தழைத்தபோ
தாடுபெற்றவிலையதும் பெறாதுகாணிவ்வுடலமே. (அ0)

ஓடமுள்ளபோதெலா மோடியேயுலாவலாம்
ஓடமுள்ளபோதெலா முறுதிபண்ணிக்கொள்ளலாம்
ஓடமுடைந்தபோ தொப்பிலாதவெளியிலே
ஓடமில்லைகோலுமில்லை யாருமில்லையானதே. (அக)

வல்லவாசலொன்பதும் மருத்தடைந்தவாசலுஞ்
சொல்லும்வாசலோரைந்துஞ் சொல்லவிம்மிநின்றதும்
நல்லவாசலைத்திறந்து ஞானவாசலூடுபோ
யெல்லைவாசல்கண்டபின் னினிப்பிறப்பதில்லையே. (அஉ)

ஆதியானதொன்றுமே யநேகரூபமாயமாய்ச்
சாதிபேதமாயெழுந்து சர்வசீவனானபின்
ஆதியோடுகூடிமீண் டெழுந்துஜன்மமானபின்
சோதியானஞானியருஞ் சுத்தமாயிருப்பரே. (அங)

மலர்ந்ததாதுமூலமாகி வையகமலர்ந்ததும்
மலர்ந்தபூகுவிந்தபோது மயக்கம்வந்தடுத்ததும்
புலன்களைந்துபொறிகலங்கிப் பூமிமேல்விழுந்ததும்
இனங்கலங்கிநின்றமாய மென்னமாயமீசனே. (அச)

வண்டுபூமணங்களோடு வந்திருந்ததேனெலாம்
உண்டுளேயடங்குவண்ண மோதுலிங்கமூலமாய்க்
கண்டுகண்டுவேரிலே கருத்தொடுங்கவல்லிரேற்
பண்டுகொண்டவல்வினை பறந்திடுஞ்சிவாயமே. (அரு)

ஓரெழுத்துலிங்கமாக வோதுமக்கரத்துளே
யோரெழுத்தியங்குகின்ற வுண்மையையறிகிலீர்
மூவெழுத்துமூவராய் முளைத்தெழுந்தசோதியை
நாவெழுத்துநாவுளே நவின்றதேசிவாயமே. (அசா)

தூரதூரதூரமுந் தொடர்ந்தெழுந்ததூரமும்
பாரபாரபாரமென்று பரித்திருந்தபாபிகாள்
நேரநேரநேரமு நினைத்திருக்கவல்லிரேல்
தூரதூரதூரமுந் தொடர்ந்துகூடலாகுமே. (அஎ)

குண்டலங்கள்பூண்டுநீர் குளங்கடோறுமூழ்கிறீர்
மண்டுகங்கள்போலநீர் மனத்தின்மாசறுக்கிலீர்
மண்டையேந்துங்கையரை மனத்திலேநினைத்தபோது
பண்டைமாலயன்றொழப் பணிந்துவாழலாகுமே. (அஅ)

நாடிநாடிநாதனை நயந்துபாருமும்முளே
யோடியோடிமீளுவாரை யும்முளேயடக்கிலீர்
தேடிமேவுகாலனுந் திகைத்துநின்றுபோய்விடுங்
கோடிகோடிகாலமுங் குறைவிலாதிருப்பிரே. (அகூ)

செய்யநீடுதெங்கிளநீர் சேர்ந்தகாரணங்கள்போ
லையன்வந்தேயென்னுளம் புகுந்துகோயில்கொண்டனன்

மெய்யன்வந்துநெஞ்சில்வாழ்க வேண்டியேயுரைத்தபின்
வையகத்துமாந்தர்முன்னே வாய்திறப்பதில்லையே. (௬0)

பூதிபூசையென்றுநீர் பூசைசெய்யும்பேதைகாள்
பூதிபூசையென்னினும் பூசைகொண்டதெவ்விடம்
ஆதிபூசைகொண்டதோ வநாதிபூசைகொண்டதோ
ஏதுபூசைகொண்டதோ வின்னதென்றியம்புவீர். (௬௧)

கூடுகட்டிமுட்டையிட்டுக் கொண்டிருந்தவாறுபோ
லாடிரண்டுகன்றையீன்ற வம்பலத்துளாடுதே
மாடுகொண்டுவெண்ணையுண்ணு மாறுடப்பசுக்களே
வீடுகண்டுகொண்டபின்பு வெட்டவெளியுங்காணுமே. (௬௨)

உடம்புயிரெடுத்ததோ யுயிருடம்பெடுத்ததோ
வுடம்புயிரெடுத்தபோ துருவுமேதுசெப்பிடும்
உடம்பிறந்துபோய்விடு முயிரிறப்பதில்லையே
யுடம்புமெய்பிறந்ததான முண்மைஞானஞ்சொல்லடா. (௬௩)

உள்ளதோபிறப்பதோ வுயிர்ப்படங்கிநின்றிடம்
மெள்ளவந்துகிட்டநீர் வினவவேண்டுமென்கிறீ
ருள்ளதும்பிறப்பது மொத்தபோதுநாதமாங்
கள்ளவாசலைத்திறந்து காணவேண்டுமாந்தரே. (௬௪)

உயிரிருந்தெவ்விட முடம்பெடுப்பதன்முனே
யுயிரதாவதேதடா வுடம்பதாவதேதடா
வுயிரையுமுடம்பையு மொன்றுவிப்பதேதடா
உயிரினாலுடம்பெடுத்த வுண்மைஞானஞ்சொல்லடா. (௬௫)

உயிர்பரத்திநின்றிடு முடம்பெடுப்பதன்முனம்
உயிரகாரமாய்விடு முடம்பகாரமாய்விடும்

உயிரையுமுடம்பையு மொன்றுவிப்பதச்சிவம்
உயிரினுலுடம்பெடுத்த தொத்தவாறுகாண்மினே. (கூரு)

தில்லையைக்கடந்துநின்று தெண்டனிட்டுவாயுவி
னெல்லையைக்கடந்துபோ யிமைப்பதுமறிவிரோ
தில்லையைக்கடந்துநின்ற செடிதலோகவெளியிலே
வெள்ளையுஞ்சிவப்புமாகி மெய்கலந்துநின்றதே. (கூஎ)

உருவுமல்லவெளியுமல்ல வொன்றதல்லநின்றதல்ல
பெரியதல்லசிறியதல்ல பேசலாவதொன்றதல்ல
மருவுவாசியுற்றகந்த மத்தநாடியுற்றதல்ல
வரியதாகநின்றநேர்மை யாவர்காணவல்லிரே. (கூஅ)

மந்திரங்கள்கற்கிறீர் மயங்குகின்றமாந்தரே
மந்திரங்கள்கற்றநீர் மறித்தபோதுசொல்விரோ
மந்திரங்களும்முளே மதித்தநீறும்முளே
மந்திரங்களாவதும் மனத்திலெந்தெழுத்துமே. (கூகூ)

சங்கிரண்டுதாரையொன்று சன்னபின்னலானதும்
மங்கிமாண்டுலகெலா மாண்டலைந்துபோனதுஞ்
சங்கிரண்டையுந்திறந்து தாரையூதவல்லிரேற்
கொங்கைமங்கைபாகனேடு கூடிவாழலாகுமே. (க00)

எங்குமுள்ளவீசனு ரெம்புடற்புகுந்தபின்
பங்குகூறுபேசுவார் பாடுசென்றணுகிலா
ரெங்கடெய்வமுங்கடெய்வ மென்றுபேதமுள்ளதோ
வுங்கள்பேதமன்றியந்த வுண்மைபேதமில்லையே. (க0க)

சிவவாக்கியர் பாடல் முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# கபிலர் வரலாறு.

உக்கிரப்பெரு வழுதியார் காலத்திலே சோழியப் பிராமண னாகிய தெய்வத்தன்மைபொருந்திய பகவனென்பவராலே மனைவி யாக ஏற்றுக்கொள்ளப்படுதற் பொருட்டுப் புலைக்குலத்தவ ளாகிய கருவூர் ஆதியென்பவள் அவருக்குச் செய்த உடம்படிக்கை வழுவா திருக்கும்படி அவருக்குத் தானீன்ற பெண்பா னால்வர் ஆண்பான் மூவர் எனப்படுகின்ற எழு பிள்ளைகளையும் அதது பிறந்த விட ங்களிலே வைத்துவிட்டுச் சென்றாளாதலின் அப்போது அவ்வெழுவ ரிலே கடைப்பிள்ளையானது சோழநாட்டிலே திருவாரூ ரென்னும் பரிசுத்த ஸ்தலத்திலே ஈன்று வைக்கப்பட்டது. அவ்வூர் வேதிய ருள் சந்ததியின்றி வருந்தியிருந்த ஒருவர் அழகும் உருவும் அமைந்து விளங்கா நின்ற அப்பிள்ளையைக் கண்டு தனியிடத்துப் பொற்குட த்தைக் கண்ட வறியவன்போற் கண் களிகூர்ந்து எடுத்துக்கொண்டு போய்த் தன்மனைவிகையிலே கொடுத்துக் கபிலரென்று பெயரிட்டு வளர்த்தார். அந்தப்பிள்ளை தாய்தந்தைகளாலே பலமுயற்சிகளுஞ் செய்து வளர்க்கப்பட்டு அறிவொழுக்கங்களிலே சிறந்து உபநயனத் துக்குத் தக்கபருவத்தை அடைந்தது. அப்பொழுது தந்தையார் மைந்தனுக்கு அச்சடங்கு செய்வித்தற்கு அந்நகருள் வாழும் அந்த ணரை அழைத்தார். அதற்கு அவர்கள் கூடி இப்பிள்ளை நம்மர பிலே பிறந்ததல்லாமையால் கூடாதென மறுத்துக் கூறினார்கள். அதுகேட்டுத் தந்தையார் மனங் கலங்கி நிற்கைகண்டு கபிலர் கடவு ளது திருவருள் பெற்று அம்மறையவர் கூட்டத்துட் சென்று இந்த அகவல் பாடிக் கன்மத்தா லன்றிச் சென்மத்தாலே சாதியென்ப தொன்றில்லை யெனச்சித்தாந்தம் செய்தருளினார். பின்னர் அதுவே விதியாக அக்கபிலருக்கு உபநயனச் சடங்கு நிறைவேறியது.

---

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# கபிலரகவல்.



நான்முகன்படைத்த நாலுவகையுலகில்
ஆன்றசிறப்பி னரும்பொருள்கூறுங்கால்
ஆண்முதிதோபெண்முதிதோ வன்றியலிமுதிதோ
நாண்முதிதோகோண்முதிதோ நல்வினைமுதிதோ தீவினைமுதிதோ
செல்வஞ்சிறப்போ வறிவுசிறப்போ
தொல்லைமாஞாலந் தோற்றமோபடைப்போ
எல்லாப்பிறப்பு மியற்கையோசெயற்கையோ
காலத்தாற்சாவரோ பொய்ச்சாவுசாவரோ
நஞ்சுறு தீவினை துஞ்சுமோதுஞ்சாதோ
துஞ்சும்போதந்தப் பஞ்சேந்திரியம்
என்செயாநிற்குமோ வெவ்விடத்தேகுமோ
ஆற்றலுடையீ ரருந்தவம்புரிந்தால்
வேற்றுடம்பாகுமோ தமதுடம்பாகுமோ
உண்டியையுண்குவ துடலோவுயிரோ
உலகத்தீரே யுலகத்தீரே
நாக்கடிப்பாக வாய்ப்பறையறைந்து
சாற்றக்கேண்மின் சாற்றக்கேண்மின்
மனிதர்க்குவயது நூறல்லதில்லை
ஐம்பதிரவி லகலுந்துயிலினால்
ஒட்டியவிளமையா லோரைந்துநீங்கும்

ஆக்கையிளமையி லைம்மூன்றுநீங்கும்
எழுபதுபோகநீக் கிருப்பனமுப்பதே

(அவற்றுள்)

இன்புறுநாளுஞ் சிலவேயதாஅன்று
துன்புறுநாளுஞ் சிலவேயாதலால்
பெருக்காறொத்தது செல்வம்பெருக்காற்
றிடிகரையொத்த திளமையிடிகரை
வாழ்மரமொத்தது வாழ்நாளாதலால்
ஒன்றேசெய்யவும் வேண்டுமொன்றும்
நன்றேசெய்யவும் வேண்டுநன்றும்
இன்றேசெய்யவும் வேண்டுமின்றும்
இன்னேசெய்யவும் வேண்டுமின்னும்
நாளைநாளை யென்பீராகில்
நமனுடைமுறைநா ளாவதுமறியீர்
நம்முடைமுறைநா ளாவதுமறியீர்
எப்போதாயினுங் கூற்றுவன்வருவான்
அப்போதந்தக் கூற்றுவன்றன்னைப்
போற்றவும்போகான் பொருளொடும்போகான்
சாற்றவும்போகான் றமரொடும்போகான்
நல்லாரென்னா னல்குரவறியான்
தீயாரென்னான் செல்வரென்றுன்னான்
தரியாதொருகணந் தறுகணாளன்
உயிர்கொடுபோவா னுடல்கொடுபோகான்
ஏதுக்கழுவீர் ஏழைமாந்தர்காள்
உயிரினையிழந்தோ வுடலினையிழந்தோ
உயிரிழந்தழுதுமென் றோதுவீராகில்

உடலினையன்றலா தின்றுங்காண்கிலிர்
உயிரினையிழந்த உடலதுதன்னைக்
களவுகொண்ட கள்வனைப்போலக்
காலுமார்த்துக் கையுமார்த்துக்
கூறைகளைந்து கோவணங்கொளுவி
ஈமத்தீயை எரியெழமூட்டிப்
பொடிபடச்சுட்டுப் புனலிடைமூழ்கிப்
போய்த்தமரோடும் புந்திநைந்தழுவது
சலமெனப்படுமோ சதுரெனப்படுமோ
பார்ப்பனமாந்தர்காள் பகர்வதுகேண்மின்
இறந்தவராயுமை யிவ்விடையிருத்திப்
பாவனைமந்திரம் பலபடவுரைத்தே
உமக்கவர்புத்திர ரூட்டினபோது
அடுபசியாற்குலைந் தாங்கவர்மீண்டு
கையேந்திநிற்பது கண்டதார்புகலீர்
அருந்தியவுண்டியா லார்பசிகழிந்தது
ஒட்டியர்மிலேச்ச ரூணர்சிங்களர்
இட்டிடைச்சோனகர் யவனர்சீனத்தர்
பற்பலர்நாட்டிலும் பார்ப்பாரிலையால்
முற்படைப்பதனில்வே றாகியமுறைபோல்
நால்வகைச்சாதியிந் நாட்டினிலூட்டினீர்
மேல்வகைகீழ்வகை விளங்குவதொழுக்கால்
பெற்றமுமெருமையும் பிறப்பினில்வேறே
அவ்விருசாதியி லாண்பெண்மாறிக்
கலந்துகருப்பெறல் கண்டதுண்டோ
ஒருவகைச்சாதியா மக்கட்பிறப்பினீ
ரிருவகையாகநீ ரியம்பியகுலத்து

ஆண்பெண்மாறி அணைதலுமணைந்தபின்
கருப்பொறையுயிர்ப்பதுங் காண்கின்றிலீரோ
எந்நிலத்தெந்தவித் திடப்படுகின்றதோ
அந்நிலத்தந்தவித் தங்குரித்திடுமலால்
மாறிவேறாகும் வழக்கமொன்றிலையே
பூசுரர்ப்புணர்ந்த புலைச்சியரீன்ற
புத்திரராயினோர் பூசுரரல்லரோ
பெற்றமுமெருமையும் பேதமாய்த்தோன்றல்போல்
மாந்தரிற்பேதமாம் வடிவெவர்கண்டுளார்
வாழ்நாளுறுப்புமெய் வண்ணமோடறிவினில்
வேற்றுமையாவதும் வெளிப்படலின்றே
தென்றிசைப்புலையன் வடதிசைக்கேகிற்
பழுதறவோதிப் பார்ப்பானாவான்
வடதிசைப்பார்ப்பான் றென்றிசைக்கேகின்
நடையதுகோணிப் புலையனாவான்

(அதுநிற்க)

சேற்றிற்பிறந்த செங்கழுநீர்போலப்
பிரமற்குக்கூத்திவயிற்றிற் பிறந்தவசிட்டரும்
வசிட்டர்க்குச்சண்டாளி வயிற்றிற்பிறந்தசத்தியரும்
சத்தியர்க்குப்புலைச்சிதோள் சேர்ந்துபிறந்தபராசரரும்
பராசரருக்குமீன்வாணிச்சி வயிற்றிற்பிறந்தவியாசரும்

(இந்நால்வரும்.)

வேதங்களோதி மேன்மைப்பட்டு
மாதவராகி வயங்கினரன்றே
அருந்தவமாமுனி யாம்பகவற்கு

கருவூர்ப்பெரும்பதிக் கட்பெரும்புலச்சி
ஆதிவயிற்றினி லன்றவதரித்த
கான்முளையாகிய கபிலனும்யானே
என்னுடன்பிறந்தவ ரெத்தினைபேரெனில்
ஆண்பான்மூவர் பெண்பானல்வர்
யாம்வளர்திறஞ்சிறி தியம்புவல்கேண்மின்
ஊற்றுக்காடெனு மூர்தனிற்றங்கியே
வண்ணாரகத்தில் உப்பைவளர்ந்தனள்
காவிரிப்பூம்பட்டினத்திற் கள்விலைஞர்சேரியில்
சான்றாரகந்தனில் உறுவைவளர்ந்தனள்
நரப்புக்கருவியோர் நண்ணிடுசேரியில்
பாணரகத்தில் ஔவைவளர்ந்தனன்
குறவர்கோமான் கோய்தினைப்புனஞ்சூழ்
வண்மலைச்சாரலில் வள்ளிவளர்ந்தனள்
தொண்டைமண்டலத்தில் வண்டமிழ்மயிலைப்
பறையரிடத்தில் வள்ளுவர்வளர்ந்தனர்
அரும்பார்சோலைச் சுரும்பார்வஞ்சி
அதிகனில்லிடை அதிகமான்வளர்ந்தனன்
பாரூர்நீர்நாட் டாரூர்தன்னில்
அந்தணர்வளர்க்க யானும்வளர்ந்தேன்

(ஆதலால்)

மாரிதான்சிலரை வரைந்துபெய்யுமோ
காற்றுஞ்சிலரை நீக்கிவீசுமோ
மானிலஞ்சுமக்க மாட்டேனென்னுமோ
கதிரோன்சிலரைக் காயேனென்னுமோ
வாழ்நான்குசாதிக் குணவுநாட்டிலும்

கீழ்நான்குசாதிக் குணவுகாட்டினுமோ
இருவும்வறுமையுஞ் செய்தவப்பேறும்
சாவதும்வேறிலை தரணியோர்க்கே
குலமுமொன்றே குடியுமொன்றே
இறப்புமொன்றே பிறப்புமொன்றே
வழிபடுதெய்வமு மொன்றேயாதலால்
முன்னோருரைத்த மொழிதவறுமல
எந்நாளாயினு மிரப்பவர்க்கிட்டுப்
புலையுங்கொலையுங் களவுந்தவிர்ந்து
நிலைபெறவறத்தி னிற்பதையறிந்து
ஆணும்பெண்ணு மல்லதையுணர்ந்து
பேணியுரைப்பது பிழையெனப்படாது
சிறப்புஞ்சீலமு மல்லது
பிறப்புநலந்தருமோ பேதையீரே.

கபிலரகவல் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

சர்வஞ்சின்மயம்.



கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

பெண்பானால்வரும், ஆண்பான் மூவருமாகிய எ[illegible]ள்ளை களையும் பிறந்த விடங்களிலேவைத்துவிட்டு ஆதியும் பகவ[illegible] அப் புறம் போம்போது ஆதியானவள் அப்பிள்ளைகளைநோக்கி [illegible]ந்தப் பிள்ளைகளை யாவர்காப்பாற்றுவாரென்று இரங்கிக் [illegible]லெழு[illegible] நிற்க அப்போது அவண் மனவருக்க[illegible] அருமபடி அக்குழந்தைக[illegible] கடவு ளருளி[illegible] உண்மை தெரிந்துசொல்லிய பாடல்கள்.

## வெண்பா.

### உப்பை.

கண்ணுழையாக் காட்டிற்கடுமுண்மரத்துக்கும்
உண்ணும்படி தண்ணீருட்டுவார் - எண்ணும்
நமக்கும்படியளப்பார் நாரியோர்பாகர்
தமக்குந்தொழிலேது தான். (க)

### ஔவை.

எவ்வுயிருங்காப்பதற்கோ ரீசனுண்டோவில்லையோ
அவ்வுயிரில்யானுமொன்றிங் கல்லேனோ - வவ்வி
அருகுவது கொண்டிங்கலேவானேனன்றாய்
வருகுவதுதானே வரும். (உ)

### உறுவை.

சண்டப்பைக் குள்ளுயிர்தன் றாயருந்தத்தானருந்தும்
அண்டத்துயிர்பிழைப்ப தாச்சரியம் - மண்டி
அலைகின்றவன்றோ யானிடத்திலுண்மை
நிலைகண்டு நீயறிந்துநில். (௩)

வள்ளி.

அன்னைவயிற்றி லருந்திவளர்த்தவன்றான்
இன்னம்வளர்க்காதோ வென்றாயே - மின்னரவம்
சூடும்பெருமான் சுருதிமுடிவிலிருந்
தாடும்பெருமானவன். (ச)

அதிகமான்.

இட்டமுடனென்றலையி லின்னவகையென்றெழுதி
விட்டசிவனுஞ்செத்து விட்டானோ
முட்டமுட்டப்பஞ்சமேயானாலும் பாரமவனுக்கன்றாய்
நெஞ்சமே யஞ்சாதே நீ. (ரு)

திருவள்ளுவர்.

கருப்பையுண்முட்டைக்குங் கல்லினுட்டேரைக்கும்
விருப்புற்றமுதளிக்கு மெய்யன் - உருப்பெற்றால்
ஊட்டிவளர்க்காதோ வோகெடுவாயன்னாய்கேள்
வாட்டமுனக்கேன்மகிழ். (சா)

கபிலர்.

கொப்பமுதலின்றளவுங் கேடொராமற்காத்
தப்புடனே யன்னமளித்திட்டோன் - தப்பித்துப்
போனானோகண்டுயிலப்புக்கானோ நின்மனம்போல்
ஆனானோவன்னாயறை. (எ)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

சர்வம்சின்மயம்.



உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்

# புத்தகவிளம்பரம்.

இப்புத்தகமும் இலக்கண இலக்கிய நூற்றிரட்டுபுத்தக [illegible] ம் அத் தொய்த சாஸ்திரத்திரட்டு முதற்புத்தகமும், இரண்டாம்பு [illegible] மும், மூன்றாம்புத்தகமும், நான்காம்புத்தகமும், ஐந்தாம்புத்தகமு [illegible] இன் னும் பல வேதாந்தசாஸ்திரங்களும், கருமம் பத்தி யோகத் [illegible] துரிய நூல்களும் வேண்டியவர்கள் சென்னபட்டணம் முத்தியா [illegible] பேட் டை பவழக்காரவீதியில் ரும - பெரி - கடையிலும், சா [illegible] மு - கடையிலும், சிதம்பரம் கீழவீதி ஸ்ரீமத் மு - சதா - சதாசி [illegible] தசுவாமி யவாளிடத்திலும், தஞ்சாவூர் வடக்குதெரு ம - ா - [illegible] - ஸ்ரீ ந - வீரபத்திரபிள்ளை யவர்களிடத்திலும், மதுரை புதுமண்ட [illegible] ம் புத் தகவியாபாரம் ம - ா - ா - ஸ்ரீ சண்முகம்பிள்ளை யவர்க [illegible] த்தி லும், திருநெல்வேலி மேலரதவீதி டி - எஸ் - ம - ா - ா - ஸ்ரீ [illegible] ராம பிள்ளை யவர்களிடத்திலும், ஆழ்வார்திருநகரியை யடுத்த [illegible] வர மடாலயத்தில் சொக்கலிங்க சுவாமி யவர்களிடத்திலுங் [illegible] துக்குப்பெற்றுக்கொள்ளலாம்.